உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 17 } பிரஜோற்பத்தி௵ கார்த்திகைமீ ௧௨ { பகுதி 5
1931௵ நவம்பர்மீ 16உ

## கடவுள் வணக்கம்.

தூளேறு தூசுபோல் வினையேறு மெய்யெனும்
தொக்கினுட் சிக்கிநாளும்
சுழலேறு காற்றினிடை யழலேறு பஞ்செனச்
சூறையிட் டறிவையெல்லாம்
நாளேற நாளேற வார்த்திக மெனுங்கூற்றின்
நட்பேற உள்ளுடைந்து
நயனங்க ளற்றதோர் ஊரேறுபோலவே
நானிலந் தனிலலையவோ
வேளேறு தந்தியைக் கனதந்தி யுடன்வென்று
விரையேறு மாலைசூடி
விண்ணேறு மேகங்கள் வெற்பேறி மறைவுற
வெருட்டிய கருங் கூந்தலாய்
வானேறு கண்ணியே விடையேறு மெம்பிரான்
மனதுக் கிசைந்த மயிலே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே. (1)

மயக்குறுமென் மனமணுகாப் பாதைகாட்டி
வல்வினையைப் பறித்தனையே வாழ்வேனாவென்
செயக்கடவேன் செயலெல்லாம் நினதேயென்று
செங்கைகுவிப் பேனல்லாற் செயல்வேறில்லை. (2)

ஓயாதோ என்கவலை உள்ளேயா னந்தவெள்ளம்
பாயாதோ ஐயா! பகராய் பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் வினைவயப்பட்டு அறிவிழந்து, மூப்பேறி வாழ்நாளை வீழ்நாளாக்கல் முறையோ என்று அம்மையை வினவுகின்றார்.

(இ-ள்.) மன்மதன் ஏறி நடாத்தும் இருளாகிய யானையையும், ஏனைய உண்மையான பெரிய யானைகளையும் வென்று, மணங்கமழும் மலர்மாலைகளைச் சூடி, வானத்தில் சஞ்சரிக்கின்ற கருமேகங்கள் மலைகளின்மீது ஏறி மறைந்து கொள்ளப் பயமுறுத்திய கருமையான கூந்தலையுடையவளே! வாளின் தன்மையை ஒத்த திருக்கண்களை யுடையவளே! இடபவாகனமேறும் எம்பெருமானுடைய மனதுக்கிசைந்த மயிலே! பருவத ராஜனுக்கு இரண்டு கண்மணி போன்று திருவவதாரம் செய்தருளிய மலைவளர் காதலிப் பெண்ணுமையே! அடியேனது விண்ணப்பம் கேட்டருள்வாயாக. எனது சரீரமோ அழுக்காகிய அணுக்கள் செறிந்த ஆடைபோன்ற—கன்மம் செறிந்த தோற்பை. இதில் நான் அகப்பட்டுக் கொண்டிருக்கிறேன். எனது அறிவு முழுதும் சுழல் காற்றிற் சிக்கிய அனல்பட்ட பஞ்சுபோல் சூறையடிக்கப்படுகிறது. இனி, நாட் செல்லச் செல்ல வயோதிகம் என்னும் யமனின் நட்பும் உண்டாவது உறுதி. இந்நிலையில் நான் மனங்கலங்கி, கண்ணற்றதாகிய ஒரு ஊர்ப் பன்றிபோல் இவ்வுலகில் அலைந்து திரிதல் உனக்குத் திருவுளச் சம்மதந்தானோ? என்க.

கூந்தலின் கருமை நோக்க இருளும், யானையும், மேகமும் கொண்ட கருமை நிகரல்ல வென்பார் "வென்று.................வெருட்டிய கருங் கூந்தலாய்" என்றார். வெண்மையான ஆடையில் சிறிது சிறிதாக அழுக்கேறுவது போல், ஆன்மாக்கள் எடுத்த தேகந்தோறும் சிறிது சிறிதாகக் கன்மமடைந்து அறிவை மயக்கிப் புண்ணிய பாவங்களில் அகப்படச்செய்து, அதனால் பல பிறவிகள் எடுத்துழல வேண்டியிருக்கிறது என்பார் "தூளேறு ...............அலையவோ" என்றார். எந்த வயதிலும் யமன் வருதல் உலக வியல்பாயினும், இவ்வுண்மையை அறிஞரே அறிவர். மூப்படைந்தபின் காலன் வரத் தவறான் என்பது எல்லாரும் அறிந்து எதிர்பார்த்தல் சகஜமாதலால் "நாளேற நாளேற வார்த்திகமெனுங் கூற்றின் நட்பேற" என்றனர்.

2. இதனால் தம்மாற் செயக்கடவது ஒன்றுமில்லை என்கிறார்.

(இ-ள்.) வாழ்வே! மயக்கத்தைச் செய்யாநின்ற அடியேன் மனம் பொருந்தாத வழியைக் காட்டிக் கொடிய கன்மத்தினை நீக்கினையே! அடியேன் என் செயக்கடவேன்? எல்லாச் செயலும் நின்னதே என்று நான் என் கரங் குவிப்பேன். இதைத் தவிர வேறு செயல் ஒன்றும் இல்லை என்க.

3. பராபரமே! ஐயனே! அடியேன் படும் கவலை என்னை விட்டொழியாதோ? அடியேன் மனதில் சுகானந்த வெள்ளம் பெருகாதோ? கூறுவாயாக என்க.




# கோவில்கள்—மடங்கள்



"புண்ணிய பூமி நமது நாடு. கரும பூமி நமது நாடு பொன்னுலகம் நமது நாடு. நீர் நில வளங்களிற் சிறந்தது நமது நாடு. மூர்த்தி தலம் தீர்த்தங்களிற் சிறந்தது நமது நாடு. வேதம் பிறந்தது நமது நாடு. ரிஷிகள் பிறந்தது நமது நாடு" என்று நாம் இக்காலத்திலும் பெருமை பாராட்டிக்கொள்ளுவதில் ஒரு சிறிதும் சலிப்படைகிறோம் இல்லை. ஆம்! உண்மைதான்! அவ்வாறு பெருமை பாராட்டிக்கொள்ளும் உரிமை நமக்கில்லாமற் போய்விடவில்லை; உண்டு என்றே நாமும் உறுதியாகக் கூறுகிறோம். ஆனால் அத்தகைய பெருமை பொருந்திய நாடு இப்பொழுது எந்நிலையில் இருக்கிறது? நமது நாட்டின் பெருமைக்கு நாம் எவற்றைக்காரணமாக எடுத்துக் காட்டுகின்றோமோ அவற்றின் நிலை எவ்வாறிருக்கிறது? என்பனபோன்ற உண்மைகளை மறந்துவிட்டு, வெறும் பழம் பெருமை பேசிக்கொண்டிருப்பதில் பயன் என்ன என்பதே எமது கேள்வி. புண்ணிய பூமியென்று போற்றுகிறோம்-ஆனால் இப்பொழுது பாவ பூமியாக பரிதவிக்கிறது. கரும பூமி என்று கழறுகிறோம்-ஆனால் தீக்கரும பூமியாகத் திண்டாடுகிறது. பொன்னாடென்று புகழுகிறோம்-ஆனால் புன்னாடாகிப் பொலிவிழந்து நிற்கிறது. மூர்த்தி தலம்-தீர்த்தம் என்கின்றோம்-அவைகளின் பேரால் நடைபெறும் ஊழல்கள் அளவிலடங்குமா? வேதங்களின் பேரால் நடைபெறும் கொடுமைகள் எத்தனை? ரிஷிகளின் பரம்பரையில் வந்தவர்கள் என்று பெருமை பேசிக்கொள்ளுவோர் அந்த ரிஷிகளின் கோட்பாடுகளைப் பின்பற்றுகின்றனரா? இக்காலத்தில் பழம் பெருமையெல்லாம் கனவாகிவிட்டதென்றே கூறவேண்டும். நமது பண்டைய நாகரிக உண்

---

அஃகிய செலவைக் கைக்கொள விரும்பு.

மைகள் பறந்தோடி மறைந்தன. இப்பொழுது எஞ்சி நிற்பன மூடப் பழக்க வழக்கங்களேயாகும்.

உதாரணமாகக் கோவில்களையும் மடங்களையும் எடுத்துக்கொள்ளுவோம். நமதுநாடோ கோவில்கட்கும் மடங்கட்கும் பேர்போனது. இமயம் முதல் குமரி வரை-இந்தியா முழுதும் கோவில் மயமாகவும் மடங்களின் மயமாகவும் விளங்குகிறது என்றே கூறிவிடலாம். இவற்றிற்கென முன்னோர்கள் விடுத்துச் சென்ற மானியப் பொருள்கட்கு எல்லை இல்லை-வருவாய்க்கும் குறைவில்லை. ஆனால் இப்பொருள்களெல்லாம் விழலுக்கிறைத்த நீர்போல் வீணிற் கழிகின்றன என்பது பகிரங்க ரகசியம்.

கோவில்கள் வேண்டாம், குளங்கள் வேண்டாம், மடங்கள் வேண்டாம், சமயம் வேண்டாம், சாஸ்திரம் வேண்டாம், சாமி வேண்டாம் என்ற கூச்சல் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே வருகிறது. இத்தகைய கூச்சலுக்காதரவாகப் பல பத்திரிகைகளும், சங்கங்களும், மகாநாடுகளும் தீவிரமாகப் பிரசாரம் செய்து வருகின்றன. ஒன்றுமறியாத பாமர மக்கள் அப்பிரசாரகர்களின் பேச்சிலும் எழுத்திலும் மயங்கிவிடுகின்றனர். சமயத்தின்மீதும், சமயாச்சாரியர் மீதும், தெய்வத்தின்மீதும் அலக்ஷியபாவம் காட்டத் தொடங்குகின்றனர். இவற்றையெல்லாம் கண்டும் காணாதவர்போல் நம் நாட்டு மடாதிபதிகளும், கோவில் அதிகாரிகளும் வாளா உறங்கிக் கிடக்கின்றனர். தாய்மொழிப் பற்றும் சமயப்பற்றுமுள்ள ஏனைய அறிஞர்களேனும் போதிய முயற்சி எடுத்துக்கொள்ளுவதாகத் தெரியவில்லை. இந்நிலைமை இனிமேலும் நீடித்துக்கொண்டே போகுமாயின் நமது இந்து சமூகத்தின் கதி என்னாகும் என்பதை நேயர்கள் சிந்திப்பார்களாக. கோவில்களையும் மடங்களையும் நம் முன்னோர்கள் ஏன் ஏற்படுத்தினர்? அவற்றிற்கு எந் நோக்கத்துடன் மானியம் முதலிய வருவாய் வகைகளை ஏற்படுத்தினர்? அவை முன்னோரின் நன்னோக்கப்படி நடைபெறுகின்றனவா? என்பவைகளை ஒவ்வொருவரும் சிந்தித்துத் தகுந்தவை செய்யக் கடமைப்பட்டிருக்கின்றனர்.

நமது நாட்டுச் சைவ-வைணவ தேவாலயங்களில் நடைபெறும் அக்கிரம அநியாயங்கட்குக் கணக்கு வழக்கில்லை. அன்பும் அருளும் நிறைந்திருந்த ஆலயங்களில் இப்பொழுது வன்பும் துன்பும் குடிகொண்டிருக்கின்றன. ஒழுக்கக் கேடான-தூய்மைக்குப் புறம்பான பல காரியங்கள் சகஜமாகிவிட்டன. சாமி வரங் கிடைத்தாலும் பூசாரி வரங் கிடைப்பதில்லை. பக்தியுள்ள ஏழைகளால் பகவானைக் காண முடியாது. பணம் படைத்தோர்க்கே பகவான் தரிசனம் கிடைக்கிறது. கோவிலதிகாரிகளின் கொள்ளையும் ஒழுக்கவிழுப்பமும் குவலயமறிந்த விஷயம். இவைகளைப்பற்றி விவரித்துக்கொண்டிருத்தல்

---

வீண் வேலையாகும். இப்பொழுது கோவில்களில் நிகழும் திருவிழாக்கள் முதலிய காரியங்களெல்லாம் குழந்தைகள் விளையாட்டாகவும் கேலிக் கூத்தாகவும் இருக்கின்றன. பக்திபூண்டு இறைவனை வழிபடும் எண்ணம் இவைகளைக் கண்டவுடன் ஓட்டம் பிடித்துவிடுகிறது. மிகுந்த பொருட் செலவு செய்துகொண்டு புண்ணிய க்ஷேத்திரங்கட்கு யாத்திரை செல்லும் ஏழை மக்களும் ஏனையோரும் அவ்விடங்களில் காண்பது என்னை? வெட்கம்! வெட்கம்!! வாணவேடிக்கை!—தாசிகள் நடனம்!-மேள தாளம்!—இவை எவ்வாறு மக்கள் மனங்களில் பக்தி அரும்பச் செய்யும் என்று கேட்கின்றோம்? ஆண்டுதோறும் லக்ஷக்கணக்காகத் தேர்—திருவிழாக்கள் சம்பந்தமாய் நமது நாட்டில் செலவிடப்பட்டு வருகிறது. இவற்றால் "கோவில் பெருச்சாளிகள்" கொழுப்பதைத் தவிர மக்கள் காணும் பயன் ஒன்றும் இல்லை என்று துணிந்து கூறலாம். இவ்வாறு செலவிடப்படும் பொருளில் நூற்றில் ஒரு பகுதியேனும் மக்களின் அறிவு வளர்ச்சிக்கு என்று செலவிடப்பட் டிருந்தால் நமது நாட்டின் நிலைமை வேறு விதமா யிருந்திருக்கும் என்பதில் ஐயமும் உண்டோ?

கோவில்களில் "தேவதாசிகள்" இருக்கவேண்டிய அவசியம் என்ன என்று கேட்கிறோம்? ஆதியில் எந்நோக்கத்துடன் "தேவதாசிகள்" கோவில்களில் அநுமதிக்கப்பட்டனர் என்பது வேறு விஷயம். அதைப்பற்றி இப்பொழுது சாஸ்திர ஆதாரங் காட்டித் தருக்கம் செய்துகொண் டிருக்கவேண்டியது அநாவசியம். "தேவ தாசிகள்" ஆதியில் கன்னியராய்—ஒழுக்கமுடையவராய்—விரத மேற்கொண்டவராய்—கோயில் திருப்பணியிலேயே கருத்துடையவராய்ச் சத்காலக்ஷேபம் செய்திருக்கலாம். இப்பொழுது அவர்களின் நிலைமை என்ன? மக்கள் சமூகத்திற்கே பெருங்கேடு சூழும் நஞ்சாகவன்றோ அவர்கள் கருதப் பெறுகின்றனர்? அநியாயமாய் ஒரு பெண் சமூகத்தையும் கெடுத்து, ஏனையோரையும் கேட்டுக்குள்ளாக்கும் "தேவதாசி முறை"யைத் தூய்மைக்கும் பக்திக்கும் காரணமாய் விளங்கும் கோவில்களில் ஏனோ அநுமதிக்கவேண்டும்? பல விடங்களில் இம்முறை சட்ட பூர்வமாய் ஒழிக்கப்பட்டது என்பதையும், இதனால் இதுகாறும் அவ்விடங்களிலுள்ள கோவில்கட்கோ, மக்கட்கோ, சட்டஞ் செய்தவர்கட்கோ எத்தகைய விபரீதமும் விளைந்துவிடவில்லை என்பதையும், ஆதலால் நமது நாட்டிலும் அம்முறையை அடியோடு ஒழிக்கத்தக்க ஏற்பாடுகளைத் தீவிரமாய்க் கைக்கொள்ளலாம் என்பதையும் வாசகர்கட்கு வணக்கமாய்த் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். நிற்க,

நமது நாட்டுக் கோவில்கள் சம்பந்தமாய்ச் செய்யவேண்டிய சீர்திருத்தங்கள் இன்னும் எவ்வளவோ உண்டு. கூடியவரையில் கோயில்

---

களில் ஆடம்பரங்களை யொழிக்க எல்லாரும் ஆதரவு நல்கவேண்டும். தேர்—திருவிழாக்களெல்லாம் மக்களின் சமய ஞானத்தைப் பெருக்கும் அறிவுத் திருவிழாக்களாக விளங்குமாறு செய்யவேண்டும். விசேஷ நாட்களில் தக்க சமயப் போறிஞர்களின் விரிவுரைகள் எல்லா மக்கட்கும் பயன்படத்தக்க முறையில் நிகழுமாறு செய்தல்வேண்டும். எல்லாருக்கும் தாய்மொழிமாட்டு ஆர்வமும் அன்பும் உதிக்கும்படியான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்.

நமது நாட்டுக் கோவில்களின் சிற்ப வேலைத்திறமை உலகப் பிரசித்தம். நம் பண்டைக் கலைப் பெருமைகளை விளக்கக் கோவில்களும் அவற்றிலுள்ள சிற்பத் திறமைகளும் இன்றும் சான்று பகர்ந்து நிற்கின்றன. புதிய கோவில்களும் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே வருகின்றன. இவை ஆகம சாஸ்திர ரீதியாய் நிர்மாணிக்கப்படுகின்றன என்று சொல்லப்படுகிறது. கோவில்களின் கோபுர வேலைப்பாடு மக்கள் மனங்களைக் கவர்ந்து நின்றாலும் அவற்றிலுள்ள ஆபாசங்களைக் கண்டு அருவருக்காமலிருக்க யாராலும் முடியாது என்று நம்புகின்றோம். புராணக் கதைகளைக் காட்டும் சித்திரங்களோடு கொக்கோக லீலைகளைக் காட்டும் சித்திரங்களும் பச்சை பச்சையாய் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவைகளையும் ஆகமங்கள் அநுமதித்துவிட்டனவே என்று யாம் அடிக்கடி ஆச்சரியம் அடைவதுண்டு. கண்ணேறு அல்லது திருஷ்டிதோஷம் பட்டுக் கோபுரமோ கோவிலோ நாசமாகிவிடும் என்ற அச்சத்தின்மீது இவ்வாபாச அழகுச் சித்திரங்கள் அனுமதிக்கப்பட்டிருக்கலாம் என்று யாம் கருதுகின்றோம். அழகிய புது வீடுகளிலும் விளை நிலங்களிலும் திருஷ்டி பரிகாரத்திற்கென்று கோமாளி உருவங்கள் வைக்கப்படுவதையும் காண்கின்றோம். அஃது எவ்வாறாயினும் ஆகுக. இத்தகைய அருவருப்புச் சித்திரங்கள் நமது பண்டைய நாகரிகத்திற்கும் கலைகட்கும் களங்கங்களாக விளங்குகின்றன என்பதை யாரும் மறுக்கத் துணியார் என்று எண்ணுகிறோம். அந்தச் சித்திரங்களைக் கண்ணுறும் ஒவ்வொரு ஆணும் பெண்ணும் வெட்கித் தலைகுனிந்து செல்லுவதை நாம் இன்றுங் காணலாம். புண்ணியப் புனிதக் கோவில்களில் இவ்வூழற் பொம்மைகள் இருக்கலாமா என்று வினவுகின்றோம். பழைய கோவில்களில் இந்தச் சித்திரங்கள் இருப்பது ஒருபுறம் இருக்கட்டும்—லக்ஷக்கணக்காகப் பொருள் செலவுசெய்து புதுக்கோவில் நிருமாணம் செய்கின்ற புண்ணிய சிலர்களேனும் அவற்றை அகற்றிவிடக்கூடாதா? இவர்களோ பற்பல வருணங்களில் விளக்கமாக லீலைச் சித்திரங்களை அமைக்கச் செய்துவிடுகின்றனர். எதிரிகள் கோவில் வேண்டாம் குளம் வேண்டாம் என்று பறையடிப்பதற்கு இத்தகைய சித்திரங்கள் ஆக்கந்தேடிக் கொடுக்கின்றன என்பதை ஒவ்வொருவரும் நினைவில் வைத்துக்கொண்டு உடனே அவற்றை அகற்ற முற்படவேண்டும்.

---

ஒருநாளேனும் மறமனே மறவேல்.

அந்தச் சித்திரங்கள் இருக்கும் இடத்தில் வேறு நல்ல சித்திரங்களை அமைத்துக் கொள்ளலாம். இந்தச் சித்திரங்களை நீக்கும் விஷயத்தில் எந்தச் சாஸ்திரமும் பார்க்கக் கூடாது என்பதே எமது உறுதியான எண்ணம். சிற்ப வேலைப்பாடுகளிற் சிறந்த சிம்மாசலக் கோவில் கோபுரத்திலிருந்த ஆபாசச் சித்திரங்கள் அழிக்கப்பட்டிருக்கும் செய்தியையும் இச் சந்தர்ப்பத்தில் ஞாபக மூட்டிக்கொள்ளுகின்றோம்.

வட இந்தியாவில் பூரி என்னும் புண்ணிய ஸ்தலத்தில் ஜகந்நாத ஆலயத்திலுள்ள ஆபாசச் சித்திரங்களை அகற்றவேண்டும் என்றும், டிசம்பர் மாதத்திற்குள் அவைகளை நீக்காவிடில் அதற்காகச் சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்படும் என்றும் ஸ்ரீஜத் ஜமன்லால் பஜாஜ் அவர்கள் தெரிவித்திருக்கிறார். தென்னாட்டிலுள்ள பிரபல கோவில்கள் எல்லாவற்றிலும் ஆபாசச் சித்திரங்கள் அடைந்து கிடக்கின்றன. இவற்றை நீக்கவேண்டியது யாருடைய கடன் என்பதை வாசகர்கள் சிந்திப்பார்களாக. அவசியமான இச் சிறு சீர்திருத்தமேனும் முதவிற் செய்ய முற்படவேண்டியது கோவிலதிகாரிகளின் கடமை என்பதை வற்புறுத்தித் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

இனி, மடங்களின் தற்கால நிலைமையையும் கடமையையும் ஒரு சிறிது கூறி இக்கட்டுரையை முடிக்கின்றோம். மடங்களெல்லாம் சமயத்தையும் மொழியையும் வளர்க்க ஏற்பட்டவை. முற்கால அரசர்களும், செல்வர்களும், பொது ஜனங்களும் அவைகட்கு மிகுந்த பொருள் வருவாயுள்ள மானியங்களை விட்டிருக்கின்றனர். பல லக்ஷக் கணக்கான வருவாயுள்ள மடங்கள் நமது நாட்டில் நிலவுகின்றன. இவற்றைப் பரிபாலிப்போர் மண் பெண் பொன் என்னும் மூவாசைகளையும் முற்றத் துறந்தவர்களாயும், ஒழுக்க சீலர்களாயும், கல்வி கேள்விகளிற் சிறந்தவர்களாயும், ஞானாசாரியர்களாயும் இருத்தல்வேண்டும் என்பது பண்டையோர் நன்னோக்கம். இன்றும் பரம்பரைக் கிரமமாய் அத்தகையோரே இருப்பதாகத்தான் சொல்லப்படுகின்றது. ஆனால் அநுபவத்தில் அவ்வாறில்லை என்பதை எல்லாரும் அறிவர். முற்றத் துறந்தவர் என்பவர் முடிவேந்தாக விளங்குகிறார். விண்ணாசை விழைபவர் பெண்ணாசையில் மயங்குகிறார். மண்ணாசையில்லார் கண்ணாசையில் கலங்குகிறார். சந்நியாசியானவோர் பொன்யாசியாராய்ப் போகிறார். சமய வளர்ச்சியோ மொழி வளர்ச்சியோ-எதையும் இவர்கள் கவனிப்பதில்லை. இவர்கள் கவனமெல்லாம் மோட்டார் சவாரியிலும், ஊட்டி வாசத்திலும், கோர்ட்டு வழக்குகளிலுமே சென்றுகொண்டிருக்கிறது. சமயத்தையும் மொழியையும் வளர்க்கவேண்டிய பொருள்கள் மேலதிகாரிகளின் விருந்துபசரிப்புகட்கும், வக்கீல்கட்குமே கொள்ளை போய்க்கொண்டிருக்கின்றன. இவ்வுண்மைகளைப்பற்றி யாம் பல தடவைகளில் குறிப்பிட்டிருக்கின்றோம் என்பதும் வாசகர்கட்குத் தெரியும். சிவில் வழக்குகளிலும் கிரிமினல் வழக்குகளிலும் மடங்களின் பேர் அடிபடு

வது சர்வ சாதாரணமாகிவிட்டது. திருமலை-திருப்பதி தேவஸ்தான நிர்வாக சம்பந்தமாய் சமீபத்தில் சென்னை சட்டசபையில் ஒரு மசோதாக் கொண்டுவரப்பட்டுத் தனிக் கமிட்டிக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. இம் மசோதா விவாதத்தின்போது அந்தத் தேவஸ்தான நிர்வாக ஊழல்கள் பல வெளியாயிருக்கின்றன. ஆண்டு ஒன்றுக்குப் பதினறு லக்ஷ ரூபாய் வருவாயுள்ள அந்த தேவஸ்தானப் பொருள்கள் பல வழிகளிலும் துர்விநியோகம் செய்யப்படுவதைத் தடுப்பதற்காகவே இம் மசோதாக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. அதன் முடிவை யாம் ஆவலுடன் எதிர்பார்க்கின்ரும்.

நமது நாட்டுப் பொது மக்கள் மடங்களைப்பற்றியும் அவற்றின் தலைவர்களைப்பற்றியும் போதிய கவனம் செலுத்தாமையே அவை இந்நிலை அடையக் காரணமாகும். சமயம் வேண்டாம் சாமி வேண்டாம் என்னும் கூட்டத்தின் கூச்சலும் ஆர்ப்பாட்டமும் நமது மடாதிபதிகளின் செவிகளில் ஏன் நுழையவில்லை என்று கேட்கின்ரும். அக் கூட்டத்தாருக்குத் தகுந்த விடையிறுத்து உண்மையை நிலைநாட்டவேண்டியது யாருடைய பொறுப்பு-கடமை என்று கேட்கின்ரும். சமயங்களின் தாயகமாகிய நம் பாரதநாட்டில் கிறிஸ்தவ சமயத்தினர் தங்கள் மதத்தைப் பரப்ப என்ன செய்கின்றனர் என்பதை நம் மடாதிபதிகள் அறியார்களா? அறிந்தும் ஒன்றும் அறியாதவர் போல் அடங்கிக் கிடக்கும் நோக்கம் என்னே? மடங்களின் வருவாய்களைக் கொண்டு ஆங்காங்கு எத்துணையோ சமய அறிவுக் கழகங்களையும் தமிழ்க் கழகங்களையும் நிறுவலாமே. இவர்கள் ஏன் இம் முயற்சியில் ஈடுபடக்கூடாது? சமய உண்மைகளைத் தற்கால ரீதியில் சிறு சிறு புத்தகங்கள் வாயிலாகவும், பத்திரிகைகள் வாயிலாகவும் வெளிவரச் செய்தால் எவ்வளவோ பயன் விளையும். சமய நூல்களையெல்லாம் அச்சிட்டு எளிய விலைக்கு எல்லோருக்கும் கொடுக்கலாம். சமய அறிஞர்கட்கும், தமிழறிஞர்கட்கும் ஊக்கம் ஊட்டிப் புதுப்புது நூல்கள் வெளிவருமாறு செய்யலாம். இத்தகைய சத்காரியங்களில் நம் மடாதிபதிகளின் திருவுளங்கள் இறங்குவதில்லையே - என் செய்வோம்?

கோவில் நிர்வாகிகளும் மடாதிபதிகளும் மனம் வைத்தால், நமது சமூகத்தை விரைவில் கல்வி கேள்விகளில் முன்னேற்றமடையச் செய்யலாம் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை. கோவில்களிலும் மக்கட்குப் பயன்படத்தக்க முறையில் பல சீர்திருத்தங்கள் செய்யலாம். அநாவசியமான ஆடம்பரங்களையும் ஒழித்துவிடலாம். தேவதாசி முறையையும் நீக்கிவிடலாம். ஆபாச பொம்மைகளையும் அகற்றிவிடலாம். இவர்கள் திருவுளம் இரங்கும் வகையில் ஆண்டவன் அருள்புரிவானக.

ஓம் தத் ஸத்.

# குதிரைக் குழு.

(க. சு. கோபாலகிருஷ்ணன்.)

தன்னினத் தாரோ டிருந்து மேய்ந்த
தன்னிக ரில்லாப் பரியொன் றொருநாள்
பலரிட மூந்தம் பழியெடுத் துரைத்துக்
கலக மூட்டிக் கலக்கி விட்டது
பரிகள் பலவும் பரிந்து கூடிச்
கரியில் லாதுந் நிலையா ராய்ந்தன
பலத்தாற் பெருமையும் இளமையின் பகட்டும்
கலந்தே கொண்ட கடும்பரி யதுவும்
வேகத் துடன்வந் தாண்டுள பரிகளைச்
சோகத் தொடுபார்த் துரைக்கு மின்னணம்.

"உலகிற் பழிப்பொடு ஊழியஞ் செய்வது
நலங்கரு தாநம் நண்பர்கட் கழகோ?
நந்தம் தலைவர்கள் நம்மைக் கட்டிச்
சொந்தங் கொளஅவர் சொற்படி பணிவதா?
ஆதலின் நண்பர்காள்! அறிமின் நும்பலம்!
ஈதும் உரிமையிஃ தெண் ணுதல் ஜயமாம்.
பகட்டான் மின்னும் வண்டியைத் தாங்கலின்
சுகம்மா னிடர்க்கே; சொல்லொணுப் பாடே
தினசரி உழைக்கத் தீர்ந்தது நமக்கே.
கனமுறு உலக்கையைக் கழனியி லீர்த்தல்,
சேணத் துடனே செல்வது வீதியில்,
நாணமின் றிச்சுமை நாடொறு மிழுத்தல்,
இவையெலா நம்மவர்க் கிழிவே இழிவே.
அவையோ ரேநீர் ஆய்விர் சற்றே.
என்னே அவ்விழி இருகாலார் பலம்?
ஆதலின், மன்னுநம் பலமுன் மானிடர் பதரே
இனியும் கடைவாய்க் கடிவா ளத்தைநாம்
கடித்து நுரைத்துக் கஷ்டப் படுவதா?
மனிதர் நம்மவர் முதுகே றுவதா?

---

தாராளம் சேருமானுல் சிக்கனம் நல்லதே. சிக்கனம் அனுவசியச் செலவு களை ஒழித்தலாகும். தாராளம் தேவையுள்ளவருக்கு அனுகூலமாக அவைகளை உபயோகிப்பதாகும். பின்னதில்லா முன்னது பிறர் பொருளாசை பிறப்பிக்கும். முன்னதில்லாப் பின்னது வீண் பொருள் விரயம் விளைவிக்கும்.

இனிக்குதி முள்நம் இருபுற மிடிக்குமா?
வேண்டா மித்துயர் விறுள பரிகாள்!
பூண்ட பழிஇகழ் பொறுத்தது போதும்!
அரிமா வின்பலம் அவர்கொண் டாண்டிலர்
வரிப்புலி கண்டுபின் வாங்குவர் அவரே.
அவைகளைப் போல்நாம் அடிமை யகற்றுவோம்.
இவைசெயின் நம்பெயர்க் கிரியல்போ வார்நார்"
இப்பே ருரைக்கு இயைந்த பரிகள்
ஒப்பக் கனைத்து ஒருங்காட் டினசிரம்!
ஆயினும் காண்பீர் ஆண்டிருந் தோர்பரி,
ஆய்ந்த அநுபவ அறிவின் முதிர்ந்து,
மற்றவர் முன்னே மாறுகொள் நினைவொடு,
உற்று நோக்கியே உரைக்கு மின்னணம்.

"இளமையில் திடமாய் இருக்கு நாளினில்
தளர்க்கு மூழியத் தகையறிந் தேன்யான்.
உபகா ரக்குணம் உடையவம் மனிதன்,
அபயமீந் தென்பால் அன்புள்ளவனாய்
அப்புல் வெளியெலா மீந்தன னெனக்கே.
தப்பா தெனக்குத் தானிய மீவான்.
கிழப்பரு வத்தெனக் கெல்லாம் சுகமே
உழவும் நிலம்சமன் உடைய தாக்கவும்
மனிதர் பொருட்டுநாம் மாய்வது சரியே
எனினும் பணியவன் இயற்றுவ திலையோ?
எத்தனை கட்டிடம் இடிமழை தாங்கிப்
பத்திர மாக்கப் பரிந்து கட்டுவான்?
நமக்கெனக் கோடை நாட்களில் வியர்த்துக்
குவிக்கின் றுன்நம் குளிர்நாட் டினி
அவன்பயி ராக்கி அறுவடை செய்யும்
தவசம் கொள்ளத் தரும்பணி புரியுநாம்
ஒருவர்க் கொருவர் உழைத்திட லாலே
பெறுவது இம்மண் பிறப்பா தலினால்
சாந்தங் கொள்வீர் சரியில் மனதில்
சேர்ந்தொருங் கேகீர் செய்வீர் கடமை"
என்னக் கூறி இடத்தில் அமர்ந்தபின்
அன்னார் கொதிப்பு அடங்கிய தோடு
படிந்ததச் சிறுபரியு மாந்தர்க்கால்,
கடிவா ளத்தொடு கட்டின ரதனையும்.

[இஃது கிரே என்ற ஆங்கிலக் கவியின் குதிரைக் குழு (Council of Horses) என்பதின் தமிழ்மொழி பெயர்ப்பு.]




# கொற்கைப் பெருந்துறை.

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ. பி. எல்.)

தொன்னலம் வாய்ந்த தென்னாட்டில் தமிழ் மன்னர் மூவரும் தலைத்தோங்கி வாழ்ந்தனர் என்பது சரித்திர உண்மையாகும். பாண்டி நாடே பழம்பதியாகும் என்று மணிவாசகனார் புகழ்ந்துரைத்த நன்னாட்டில் முத்தமிழ் வளர்த்த பாண்டியன் மீனக் கொடியோடு மிளிர்ந்தான். செந்நெல்லும் கரும்பும் செழித்தோங்கிய சோழ நாட்டில் வேங்கைக் கொடியோனாய வளவன் வீற்றிருந்தான். மஞ்சுலாவும் சோலை சூழ்ந்த மலைநாட்டில் வில்லவன் அமர்ந்து விளங்கு புகழ் எய்தினான். இவ்வாறு தமிழ் மன்னர் குடையின் கீழ்த் தங்கி நின்ற மூந்நாடும் அளவிற் குறைந்தனவே யாயினும் வளமார்ந்த செழு நிலமாய் விளங்கித் திகழ்ந்தது. பாண்டிய நாட்டில் வையை யென்னும் பொய்யா நதிபாய்ந்து வளம் பெருக்கியது. இந்நாளில் ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் வையையாறு அந்நாளில் பூம்பொழில்களின் இடையே சென்ற புனலாறாக இலங்கிற்றென்பது சிலப்பதிகாரம் முதலிய சங்க நூல்களால் அறியப்படுகின்றது. ஆழநெடும் புனலமைந்த இவ்வாற்றின் அழகினை,

> "புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
> வையை யென்ற பொய்யாக் குலக்கொடி."

என்று இளங்கோ அடிகள் இனிமைசான்ற மொழிகளால் எழுதிப் போந்தார். புலனழுக்கற்ற புலவரும், பொய் யடிமை இல்லாப் புலவரும், போற்றிப் புகழும் பெருமைசான்ற திருநதியை "புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி" என்று அடிகள் புனைந்துரைத்தார். இத்தகைய அழகுவாய்ந்த ஆற்றின் கரையில் மதுரை மூதூர் அமர்ந்திருந்தது. தொன்மை வாய்ந்த பாண்டி நாட்டின் தென்பால் அமைந்த செந்தமிழ் நாட்டில் பொருனை யெனும் திருநதி பரந்து பாய்ந்தது. பொதிய மலையிற் பிறக்கும் பொருனை யாறு கடலொடு கலக்கும் துறையில் கொற்கை என்னும் துறைமுகம் அமர்ந்திருந்தது.

---

உண்மையைக் கண்டுபிடிப்பதே மனிதனுடைய மகோன்னதமான லட்சியம். உண்மையைத் தேடுவதே பரமோத்தமமான தொழில், அது அவனுடைய கடமையுமாகும்.

இனி, பொன் கொழிக்கும் ஆறென்று புலவர் புகழ்ந்துரைத்த பொன்னி யாற்றின் வண்மையால் வளம் சுரந்த வளவன் நாடு நீர்வளம் மலிந்த நாடாக நின்று இலங்கிற்று. கழனி நாடென்று கவிஞர் புகழும் பெருமைசான்ற திரு நாட்டின் உயிரென உலாவிச் சென்ற இவ்வாற்றின் அருமையை,

"கோணிலை திரிந்து கோடை நீடினும்
தானிலை திரியாத் தண்டமிழ்ப் பாவை."

என்று சாத்தனார் போற்றிப் புகழ்ந்தார். இக்காவிரி யாற்றின் கரையில், ஊரெனப்படுவது உறையூரென்று உரையாசிரியர் வியந்துரைத்த திருநகர் விளங்கித் திகழ்ந்தது. பொன்னியாறு கடலொடு கலக்குமிடத்தில் பூம்புகார் நகரமென்னும் காவிரிப்பூம் பட்டினம் களித்திலங்கிற்று.

இனி மலைவளம் சிறந்த சேரநாட்டில் பேரியாறு என்னும் பெயரமைந்த திருநதி பூவார் சோலைகளின் இடையே புகுந்து சென்றது. கோங்கும் வேங் கையும் நாகமும் திலகமும் நிறைந்த தளிர்பூஞ்சோலைகளினிடையே பரந்து பாய்ந்த இந்நதியின் பெருமையை,

"கோங்கம் வேங்கை தூங்கிணர்க் கொன்றை
நாகம் திலகம் நறுங்காழ் ஆரம்
உதிர்பூம் பரப்பின் ஒழுகுபுனல் ஒழித்து
மதுகரம் ஞிமிறொடு வண்டினம்பாட
நெடியோன் மார்பில் ஆரம்போன்று
பெருமலை விலங்கிய பேரியாறு."

என்று இளங்கோ அடிகள் எழிலுற எழுதியமைத்த நயம் அறிந்து இன்புறத் தக்கதாகும். இன்னும் ஆன் பொருநை என்னும் பெயரமைந்த ஓர் அழகிய நதியும் சேர நன்னாட்டைச் செழிப்புறச் செய்தது. இவ்வான் பொருநை யாற்றின் கரையில் சேரர் தலைநகராய வஞ்சிமா நகரம் அமைந்திருந்ததென்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. இங்ஙனம் செழுமை யுற்று நின்ற நன்னாடுக ளின் பெருமை யறிந்த ஔவையார்,

"வேழமுடைத்து மலைநாடு மேதக்கச்
சோழ வளநாடு சோறுடைத்து—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோருடைத்து."

என்று அருளிய புகழுரை பொருளுரையாகும். வில்லவன் ஆண்ட சேர நாட்டை வேழமுடைய மலைநாடென்றும், வளவன் ஆண்ட நீர் நாட்டைச் சோறுடைய வளநாடென்றும், மீனவன் ஆண்ட தமிழ்நாட்டை முத்துடைய தென்னாடு என்றும் ஔவையார் அறிந்துரைத்துப் போந்தார். தென் கட லில் விளைந்த முத்து ஆழ நெடுந்திரை ஆழி கடந்து யவனமாதரது கழுத்தி லும் காதிலும் அழகுற இலங்குவதாயிற்று. குமரிக்கும் கோடிக்கும் இடையே யமைந்த கொற்கைத் துறையில் குளித்த முத்து கலத்திலும் காலினும்

இதைக் கூறியது யார் என்று தேடற்க. கூறியதை மட்டுமே ஆராய்க.

சென்று காவலர் முடிமேல் களித்திலங்குவதாயிற்று. கலந்தருதிருவைக் காதலித்த யவனர் கொற்கைத் துறையில் வாழ்ந்த குடிகளோடு கலந்துறைவா ராயினர். இப்பெருந் துறையில் விளைந்த முத்தின் அருமையைப் பழந்தமிழ் நூல்களில் பரக்கக் காணலாம். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டி யன் நெடுஞ் செழியனது பெருமையைப் பேசப்போந்த புலவர்,

"விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்
இலங்குவளை இருஞ்சேரி
நற்கொற் கையோர் நசைப் பொருந."

என்று புகழ்ந்துரைத்த நயம் போற்றத்தக்கதாகும். சூல்முற்றி ஒளி முதிர்ந்த சீரிய முத்தெடுக்கும் கொற்கையோர் விரும்பும் கொற்றவனே யென்று புல வர் பொருநனைப் புகழ்ந்துரைத்துப் போந்தார். தென்னவன் நாட்டில் தெள் ளிய முத்துவிளையும் துறைகளைச் செவ்வையாய் அறிந்த பொருனை நாட்டுப் புலவராய குமரகுருபர அடிகள்,

"கோடும் குவடும் பொருதரங்க
குமரித் துறையிற் படுமுத்தும்
கொற்கைத் துறையிற் றுறைவாணர்
குளிக்குஞ் சலாபக் குவான் முத்தும்
ஆடும் பெருந்தண் துறைப் பொருனை
ஆற்றிற் படுதெண் ணிலாமுத்தும்
அந்தண் பொதியத் தடஞ்சாரல்
அருவி சொரியும் குளிர்முத்தும்."

என்று அழகுறத் தொகுத்துரைக்கும் அடிகளின் நயம் அறியத்தக்கதாகும். குமரித் துறையிலும், கொற்கைத் துறையிலும், பொருனை யாற்றிலும் பொதி யத் தருவியிலும் ஒளி முதிர்ந்த விழுமிய முத்துப் பிறக்குமென்று அடிகள் அழகுற எழுதியமைத்தார். இவ்வாறு புலவர் நாவிற் பொருந்திய கொற்கைத் துறையின் அருமை யறிந்த சோனகரும் யவனரும் தென் குமரிக்குத் தென் பாலமைந்த திரைக் கடலை கொற்கைக் கடலென்றே குறித்துவைத்துள்ளார். மணிமாட மதுரைமாநகரம் மீனவன் தலைநகராய் மிளிர்வதன் முன்னமே கொற்கைத் துறை இணையற்ற துறைமுகமாய்த் திகழ்ந்தது. தென்புலம் காக்கும் தென்னவனைக் கொற்கைக் கோமான் என்று சிறுபாணாற்றுப்படை குறிக்கின்றது. இன்னும் கொற்கைப் பெருந்துறையின் செழுமையையும் அவ்வூரில் அரசுபுரிந்த கொற்றவன் பெருமையையும் கூறப்போந்த அம்மூவ னார் என்னும் அருந்தமிழ்ப் புலவர்,

"இருங்கழிச் சேயிறா இனப்புள்ளாரும்
கொற்கைக் கோமான் கொற்கையம் பெருந்துறை
வைகறை மலரும் நெய்தல்போல
தகைபெரிதுடைய காதலி கண்ணே."

என்று சிறப்பிக்கும் மொழிகள் செம்மைசான்றனவாகும். கலந்தரு திருவிற்

---

களித்திருந்த மாறன் மூதூரை கொற்கையம் பெருந்துறை என்று புலவர் புகழ்ந்துரைத்தார். இத்தகைய பெருமை சான்ற பெருந்துறையில் விளங்கிய செழியனைக் கொற்கைக் கோமான் என்று குறித்துப் போந்தார். இவ்வாறு கவிஞர் பாடும் சிறப்பமைந்த கொற்கைத் துறையில் விளைந்த முத்தைக் காதல் புரியும் இளங்கன்னியரது கொவ்வைச் செவ்வாயிலமைந்த வெள்ளிய மூரலுக்கு உவமை கூறும் முறை செந்தமிழ் நூல்களில் சிறந்து விளங்கக் காணலாம். பன்னலர்திகழும் தன் காதலியின் முத்தனைய வெண்ணகையைப் புகழப்போந்த தலைமகன்,

"அலங்கிதழ் நெய்தல் கொற்கை முன்றுறை
இலங்கு முத்திறைக்கும் எயிறுகெழு துவர்வாய்
அரம்போழ் அவ்வளைக்குறு மகள்
நரம்பார்த்தன்ன தீங்கிளவிகளே."

என்று அந்நங்கையின் நலம் புனைந் துரைக்கும் நயம்சான்ற மொழிகள் ஐங்குறு நூற்றில் அமைந்திலங்கக் காணலாம்.

இங்ஙனம் நற்றமிழ்வல்ல கவிஞர் பாட்டில் பயின்ற கொற்கைப் பெருந்துறை இப்பொழுது சீரிழந்த ஒரு சிற்றூராகப் பொருனை நாட்டில் அமைந்திருக்கின்றது. நித்திலம் நல்கிய நீலத் திரைக் கடல் இப்பொழுது நான்கு மைலுக்கு அப்பால் விலகி நிற்கின்றது. அலையொலி மலிந்த மூதூர் இப்பொழுது அமைதியுற்றுத் துஞ்சுகின்றது. கொடுப்போர் ஓதையும் கொள்வோர் ஓதையும் இடையறாது நிகழ்ந்த கொற்கைமூதூர், காதலனை இழந்த கற்புடையாள் போல் கவினிழந்து பொலிவழிந்து நிற்கின்றது. முத்தம் தரும் தென்கடல் கொற்கைக்கு முத்தம் தராது விலகியபொழுது காயல் என்னும் பெயரமைந்த கடற்கரையூர் எழுந்து திகழ்வதாயிற்று. பதின்மூன்றாவது நூற்றாண்டில் தமிழ்நாடு போந்த மார்க்கோப்போலோ என்னும் யவன அறிஞர் இக்காயலின் பெருமையை விரித்துக் கூறியுள்ளார். இக்காயலும் பிற்காலத்தில் கருங்கடலால் கைவிடப்பட்டது. துறைமுகமாக அமைந்த இடங்களைத் தூர்த்துக் கொடுங்கடல் கொண்ட குமரி நாட்டை மீண்டும் கவரக் கருதும் பொருனை யாற்றின் பெருமை யறிந்த போர்ச்சுகீசியர் இக்காயலைக் கைவிட்டுத் தூத்துக்குடியில் துறைமுகம் அமைக்கத் தொடங்கினார்கள். பொருனை யாறும் பெருங் கடலும் போர்புரியும் இடத்தில் அகப்படாத இவ்வூர் இன்றளவும் தென்னாட்டில் சிறந்த துறைமுகமாகவும் முத்துக் குளிக்கும் துறையாகவும் நின்று நிலவுகின்றது.



---

மலரின் பல இதழ்கள் அரும்பில் ஒருங்கிருக்கும். விரிந்தவுடன் பிரிந்து விடும். அதுவே அதன் அழகு. அதுபோல் உலகிலுள்ள பல ஜாதியாரும் அன்பால் ஒன்றுறப் பிணிப்புண்டிருப்பினும் தங்கள் விசேஷ குணங்களை வேறு வேறாக விருத்தி செய்யும்பொழுதுதான் மனிதவர்க்க மலர் பூரணம் பெறுகின்றது.

# தமிழ் மக்களின் பொழில் விளையாட்டு

(மேலைப்புலோலி போ. நடராஜன்)

தமிழ்ப் பெருங் காப்பியத்திலே பொழில் விளையாட்டு வருணித்துரைக்கப்படும். தமிழில் ஒவ்வொரு நிலத்திற்குமுரிய பூச் சொல்லப்பட் டிருக்கிறது. எனவே, தமிழ் நாட்டில் பூஞ்சோலைகள் மிகுதியும் இருந்தன வென்பதும், அங்கே ஆடவர் மகளிர் சென்று விளையாடும் வழக்கம் இருந்ததென்றும் அறியக் கிடக்கின்றது. ஆங்கிலேயருக்கு அடிமைகளாய் அவதிப்படுகின்ற நாம் இப்போது அப் பழைய வழக்கத்தில் ஆசைகொண்டு அதன் பண்புபேச இடம் பெருதவர்களாய் இருக்கின்றோம். எனினும், தமிழும் தமிழ் நிலவழக்கும் அறியவேண்டியது தமிழ் மக்கள் கடமை. பண்டை வழக்கம் எண்ணும்போது ஆனந்தக் களிப்பு உண்டாகின்றது. எனவே நந்தமிழ் நிலவழக்கத்தினுள் ஒன்ருன பொழில் விளையாட்டு நாம் பாராட்டவேண்டியது ஒன்றேயாமென்க.

மங்கலப் பொருளான மலர் தேவர்களுக் குரியது. நாற்றத்திலுந் தோற்றத்திலும் நல்லதாய் கண்களுக்குக் காட்சியாய் காற்றினுல் அதின் நறுமணங் கவர்ந்து கொண்டு வரப்பட்டு, மனிதருள்ளம் மலரவும் அவர்களுடல் தழைக்கவுங் குளிர்ச்சியைத் தருவதினுல் மனிதருக்கும் அது வேண்டியது. பூந்தழை பெண்களுடுக்கும் வழக்கம் நமது தமிழ் நிலவழக்கில் மிக விசேடமானது. இத்தகைய மலர்களையுடைய மரங்கள் நிறைந்த சோலையில் மனிதர் விளையாட்டைத் தமிழ் நூல்கள் வர்ணித்துரைக்கும் வனப்பு கேட்போ ரெவர்க்கும் இன்பம் பயப்பது.

இப் பொழில் விளையாட்டு வழக்கு பண்டைநாளில் நந்தமிழ் நிலயிருந்த செம்மையையுஞ் சிறப்பையும், பெண்கள் சுதந்தரத்தையும், அவர்கள் கற்பையும், ஆடவர்க ளாண்மையையும், அவர்க ளறிவையும், வாய்மையையும், பிற நலன்களையும் உரைக்கின்றது.

தமிழ்மக ளொருத்தியை அவளன்னை தோழியர்களுடன் கூட்டி இப் பகல் கொல்லைகாத்து எல்பட வருதி ரென்று போகவிட்டனள். தாயுத்தரவு பெற்றுப்போன தலைவியுந் தோழிகளும் புனங்காத்தற் ரெழிலை மேற்கொண்டிருந்தனர். வெளி நிலத்தி லமைந்த பரணிலிருந்து புனங்காத்த பெண்களது மெல்லிய உடம்பில் வெய்யிலின் வெம்மை அவர்களை வெதும்பச் செய்தது. அதனுல் அருவி நீராடும் விருப்பு அவர்களுக்கு உண்டாயிற்று. பளிங்கைக் கரைத்துச் சொரிந்து வைத்தாற்போன்ற பரந்த சுனை நீரிலே அப்பெண்கள் பாயம்பாடிக் குடைந்து நீர் விளையாடினர். நீர் விளையாடிய அந்நங்கையர் தங்கள் பொன்போலும் மின்னுகின்ற முதுகிலே தாழ்ந்து கிடந்த நீலமணி யழுத்தினதுபோன்ற கரிய கூந்தலின் நீரைப் பிழிந்து ஈரமுலர்த்திப் பூப் பறித்தலை விரும்பினர். மலர் பறித்தலை விரும்பிய மங்கையர் சிவந்த செங்காந்தள் மலர்களையும், ஆம்பல் அனிச்ச மலர்களையும், செங்கழுநீர் மலர்களையும், செந்தாமரை மலர்களையும், இவைபோன்ற தொண்ணூற்றேழுவிதமான

மலர்களைப் பறித்துப் பின்னும் பூக்களிலே விருப்பம் மிகுந்தவர்களாய்ப் பல சாதிப் பூக்களைத் திரிந்து பறித்து, அகன்ற பாறையிலே குவித்தனர் என்று கபிலர் குறிஞ்சிப்பாட்டிற் கூறுந் திறன் தமிழரல்லாத பிறரையுந் தமிழையுந் தமிழ் வழக்கையும் விரும்பச் செய்யுந் தன்மையினதாகும்.

"சந்தனமுஞ் சண்பகமுந் தேமாவுந் தீம்பலவும் ஆசினியும் அசோகுங் கோங்கும் வேங்கையுங் குரவமும் விரிந்து, நாகமுந் திலகமும் நறவும் நந்தியும் மாதவியும் மல்லிகையும் மௌவலொடு மணங்கமழ்ந்து, பாதிரியும் பரவைஞாழலும் பைங்கொன்றையும் பிணி யவிழ்ந்த பொரிப்புன்கும் புன்னகமும் உருக்கொடு முகை சிறந்து, வண்டறைந்து, தேனார்ந்து, வரிக்குயில்கள் இசைபாடத் தண்டென்றல் இடைவிராய்த் தனியவரை முனிவுசெய்யும் பொழிலது நடுவண் ஓர் மாணிக்கச் செய்குன்றின்மேல் விசும்புதுடைத்துப் பசும்பொன் பூத்து வண்டுதுவைப்பத் தண்டேன் துளிப்பதோர் வெறியுறு நறுமலர் வேங்கைகண்டாள்; கண்டு பெரியதோர் காதல் களிகூர்ந்து தன் செம்மலர்ச் சீறடிமேற் சிலம்பு கிடந்து சிலம்பு புடைப்ப, அம் மலரணிக் கொம்பர் நடைகற்பதென நடந்து சென்று, நறைவிரிவேங்கை நாண்மலர் கொய்தாள்" என்று நக்கீரனார் தமிழ் மகளொருத்தியின் பொழில் விளையாட்டும் அவள் பூக்கொய்து நிற்றலுங் கூறுமழகு தமிழ் மொழியில் இன்பச்சுவை பயப்பதாம். நக்கீரனார் கூறு மிவ்வழகு நந்தமிழ் மகளுக் கன்றி, வேறுமொழியிற் காணப்படக் கூடுமோ வென்று எமக்கு வீம்புபேச வல்லமையைத் தருகின்றது. இங்ஙனந் தமிழ் வழக்கத்தைக் கண்டு அதைத் திறம்படக் கூறுமாற்றல் நக்கீரனாரைத் தமிழ்த் தலைமைப் புலவராகச் செய்தது. எனது இச் சிறிய கட்டுரையில் எதுவும் நலன் தோன்றுவதாயின் அது நம் தமிழன்னைக்கும் அவள் நலன்நாடிய நக்கீரர், கபிலருக்குமே யுரியது. குற்றங்களுளவேல் அவை அடியேனது அறியாமைக்கே யுரியன.

'தமிழ்ப் பொழில் விளையாட்டு' என்று பொதுப் பெயராற் கூறி இங்கே பெண்கள் பூக்கொய்து விளையாடிய வனப்பையே கூறினமையால் இப்பொழில் விளையாட்டுக்கு ஆண்மக்கள் விலக்கப்பட்டனரோ வெனில், அற்றன்று. இக்கட்டுரை மிகச் சுருக்கமாகவே கூறப்பட்ட தாதலின், தமிழ் நூல்களிற் கண்ட பொழில் விளையாட்டு முழுவதும் இதில் கூறப்பட்டது என்று கொள்ளற்க. அங்ஙனங் கூறமுடியாமையும், கூறுமாற்றல் எனக்கு இல்லாமையும் அறிஞர் அறியவேண்டியது அவர்தங் கடன் என்கின்றேன். ஆடவரை விலக்காது அவரும் பூம்பொழில் போகுங் காட்சியை,

"கோதை தொடுத்த நரம்பு முலையாக, அவற்றிற்றூற்றிய கீதம் பாலாகச் சுரந்து ஊட்டிக் காமக்குழவியை வளர்ப்ப, அதுகேட்டுக் கணவன் புனலினின்று நீங்கிப் புணர்ச்சி வேட்கையாற் பொழிற்குப் போகின்றான் விருப்பம் இனிது காண்மின்" என்று ஆசிரியர் நச்சினார்க் கினியர் எழுதிய உரையை யுடைய,

"தாமங் கமழுங் கோதைதொடுத்த துயரிமுலையாத்
தேமென் கீதம் பாலாச் சுரந்து திறத்தினூட்டிக்
காமக் குழவி வளர்ப்பக் கணவன் புனலுணீங்கிப்
பூமென் பொழிலுக் கிவர்வான் புகற்சிகாண் மினினிதே"

என்ற சீவகசிந்தாமணிச் செய்யுளைக் காட்டி இக்கட்டுரையை முடிக்கின்றேன்.

# மேனுட்டுத் தத்துவம்

(கி. பாலசுப்பிரமணியம், M. A.)

(279-ம் பக்கத் தொடர்ச்சி.)

லாக் என்பவருடைய கொள்கை இன்னதென்று கண்டோம். விஷயங்களை நாம் அறிய அவை நம்மால் அனுபவிக்கப்பட வேண்டும். அதாவது ஒரு பொருளைப் பார்த்தா லொழிய அது இருப்பது நமக்குத் தெரியாது. ஒருவன் பேசுவதைக் கேட்டாலொழிய அவன் இருப்பது தெரியாது. ஒரு பொருளைத் தொட்டாற்றான் அதன் தன்மை தெரியும். பொருள்களின் குணங்கள் நமது இந்திரியங்களின் மூலமாய் நமக்குத் தெரிகின்றன. சில குணங்களை நமது மனமானது பொருள்களில் புகுத்தி அவற்றிற்குக் குணங்களைத் தருகின்றன. இந்த குணங்களெல்லாமின்றிப் பொருள்கள் தனியே யிருக்கமுடியுமா? லாக் என்பவர் கூடும் என்றே சொன்னுர். குணமில்லாமல் தனியே நிற்கும் வஸ்துவின் பெயர் 'ஜடம்' என்ருர். இப் பொருள் குணங்களைப் பெற்றுப் பல வுருவங்களாகத் தோன்றுகின்றன. குணங்கள் தனியே நில்லா. இவைகளுக்கு உறைவிடம் 'ஜடப் பொருள்' என்ருர்.

இவருக்குப் பின்வந்த தத்துவ ஞானியின் பெயர் பார்க்லீ. இவர் இருபத்தைந்து வயதிலேயே விசேஷ கல்வித் திறமடைந்து தமது தத்துவத்தை வெளியிட்டார். லாக் குணங்களால் பொருள்களை யுணர்கிறோ மென்ருர். குணங்கள் நமது இந்திரியங்களில் பதிந்து, பொருள்களை யறியச் செய்கின்றன. உதாரணமாக, வீதியில் விசேஷ ஊர்வலம் போகிறது, நமது கண்கள் அதைப்பார்த்தா லொழிய அது போவது தெரியாது. ஒரு சத்தம் கேட்கிறது. இதற்கென்ன அர்த்தம்? நமது காதுகள் சத்தத்தைக் கேட்கின்றன. ஒரு பொருள் நம்மேல் படுகிறது. அதாவது நமது தேகம் அதனை ஸ்பரிசிக்கிறது. ஒரு வஸ்து ருசியாக விருக்கிறது. என்ன அர்த்தம்? நமது நாக்கு அதனைச் சுவைக்கிறது. இவ் வனுபவங்களி லிருந்து என்ன தெரிகிறது? குணங்களை யறிய நாம் அதாவது குணங்களை யறியக்கூடிய சித்தமுள்ள ஜீவன் ஒன்று இருக்கவேண்டும். இந்த ஜீவனின்றிக் குணங்களை யறிய முடியாது. லாக் குணங்கள் தங்க ஜடப் பொருள் வேண்டுமென்ருரே, நாம் இன்றி ஜடப்பொருள் இருந்தென்ன இல்லாவிட்டா லென்ன? ஜடப்

---

மனிதனைப் பூரணமாக்கவேண்டிய குணங்கள் எவை? கலங்கா அறிவு; அன்பு நிறை நெஞ்சு; நீதியான தீர்மானம்; ஆரோக்கிய உடல். கலங்கா அறிவின்றேல் அவசரமாய் முடிவு செய்துவிடுவோம். அன்புநிறை நெஞ்சின்றேல் சுயநலமுள்ளவராயிருப்போம். நல்ல எண்ணம் இருப்பினும் நீதியான தீர்மானமின்றேல் நன்மை உண்டாவதினும் தீமையே உண்டாகும். உடற்சுகமின்றேல் ஒன்றும் செய்ய முடியாது.

பொருள் இருக்கிறதென்றால் அதையும் நாம் பார்க்கிறோமென்றுதானே அர்த்தம். நாம் பார்க்காமல், கேட்காமல், ஸ்பரிசிக்காமல் இருக்கக்கூடிய வஸ்து ஒன்றுமில்லை. ஆகையால் குணங்களிருக்க வெளியில் ஒரு வஸ்து வேண்டுவதில்லை. மனமே அவசியம். பொருள் இருக்கிறது என்பதற்கு நாம் அதை அனுபவிக்கிறோமென்றுதான் அர்த்தம்.

அதாவது பார்க்ளீ வெளியுலகத்தையே அநாவசிய மாக்கிவிட்டார். வேண்டியதெல்லாம் மனமும், மனத்தால் அநுபவிக்கப்படும் குணங்களுமே. உலக மிருக்கிறது என்பதற்கு உலகத்தைப்பார்க்க ஒரு ஜீவனிருக்கிறதென்று ஒரு பொருள். இப்போது நாம் தூங்கும்போது உலகமெங்கு போய்விடுகிறது? அதைப்பார்க்க ஜீவனில்லையே எனில் "நாம் பார்க்காவிட்டால் நம்மைப்போலுள்ள மற்ற ஜீவன்க ளிருக்கின்றனவே. ஒன்றுவது பார்த்துக் கொண்டிருக்கும். மேலும் உலகத்தின் ஒரு பகுதியில் மனிதர் தூங்கினாலும் இன்னொரு பகுதியிலுள்ளோர் விழித்திருக்கிறார்கள். உலகம் அவர்களால் உய்க்கப்படுகிறது."

இதென்ன விந்தை! உலகம் மனிதனை அதாவது மனத்தையா நம்பியிருக்கிறது! அப்போது மனிதனுக்குத் தோன்றியவாறு ஒருலகத்தை நிர்மாணித்துக்கொள்ளக் கூடாதா? அப்படி நிர்மாணித்துக் கொள்ளின் நாம் ஒருவரோடொருவர் பேசுவது எங்ஙனம்? உலகம் கற்பனை யென்றால் உலகத்தின் அங்கங்களாகிய நாமும் கற்பனை யல்லவா? கற்பனை எப்படித் தன் வீட்டையே இடித்துக்கொள்ளலாம்? என்று சொல்லக்கூடும். அதற்கு பார்க்ளீ "இவ் விபரீத அர்த்தம் பொருந்தாது. ஜடப்பொருள் தனியே இருக்கமுடியாதென்று சொன்னது வாஸ்தவம். ஆனால் சித்த ஸ்வரூபமான ஜீவன்க ளிருக்கலாமென்பதில் தடையில்லை. ஏன்? அவையிருப்பது அவைகளுக்கே தெரியும். வேறொருவர் அவற்றை அறிய வேண்டியதில்லை. ஆனால் இந்த ஜீவன்கள் இஷ்டப் பிரகாரம் உலகத்தை நிர்மாணிக்காம லிருக்கும்பொருட்டே கடவுளென்னும் முழு சித் ஸ்வரூப மொன்று இருக்கிறது. இக் கடவுளே உலகத்தை அறிகிறார். ஆகையால் ஜனங்கள் விழித்திராமற்போனாலும் கடவுள் சதா உலகத்தை அனுபவிப்பதால் அது இருக்கிறது. மேலும் அவர் நம்முடைய மனங்களை நிர்மாணித்து இன்ன இன்ன குணங்கள் தோன்றவேண்டும் என்று திட்டஞ் செய்திருக்கிறார். இத் திட்டத்தை மீறுதல் முடியாது. மீறுவானேன்? கடவுளின் செய்கைகளைக் கேள்விக் குட்படுத்தலாமோ? இல்லை. கடவுளின் இருப்பைக் குறித்துதான் ருஜு கேட்க வேண்டுமா? கடவுளின் இருப்பையறிய உலகத்தை நோக்கவேண்டும். ஒரு மனிதன் இருக்கிறான் என்றால் என்ன அர்த்தம்? அவன் செய்யும் வேலைகள் இன்னவை யென்று தெரிந்து கொள்வது-அதாவது அவன் செய்கைகளைக்கொண்டு அவன் இருக்கிறான் என்கிறோம். அதேமாதிரி உலகத்தின் அதிசயங்களைக் கண்ணுறும் மாந்தர் கடவுள் இருக்கிறார் என்பதைக் குறித்துக் கிஞ்சித்தும் சந்தேகமடையார்.

லாக்கின் தத்துவம் பிரத்தியக்ஷப் பிரமாணம். பார்க்ளீ பிரத்தியக்ஷத்தையும் மனத்தோடு இணைத்து மனமின்றி உலகில்லை யென்றார். பார்க்ளீக்குப் பின்வந்த ஹியூம் என்பவர் உலகம் மனம் இரண்டையுமே சந்தேகித்தார்.

---

ஜயமானது கிடைத்துக் கொண்டிருக்கு மட்டும் சந்தோஷம் தரும். பின்னர் அது பறவை பறந்தோடிவிட்ட பழைய உருவுக்கூடு.

பார்க்ளீ சொற்படி குணங்களே உண்மை. குணங்கள் தவிர வேறு ஜடப் பொருள் இல்லை. ஆனால் பார்க்ளீ உலக மிருப்பது கடவுளின் திட்ட மென்றார். திட்டம் என்பது என்ன? காரிய காரண சம்பந்தம். காரண மொன்று இன்றிக் காரியம் ஒன்றும் நடைபெறாதென்று அவர் சொன்னார். கடவுள் காரணம், உலகம் காரியம் என்றார். அப்படியே நாமும் சில விஷயங்களைக் காரண காரிய சம்பந்தமாகக் கொள்கிறோம். இம்மாதிரி சம்பந்தத்தை ஊகித் தறிகிறோமா அல்லது கண்கூடாகக் காண்கிறோமா? ஊகிக்க முடியாதென்பது நிச்சயம். ஏனெனில், எந்த விஷயத்தை யறியவும் பிரத்தியக்ஷமாய்க் காணவேண்டும். ஆகையால் காரண காரிய சம்பந்தம் பிரத்தியக்ஷமாகக் கண்டாலொழிய வாஸ்தவமாகக் கொள்ளலாகாது. நாம் பார்ப்பது காரியம்—காரணம்—இரண்டு தனி விஷயங்கள். ஒன்றுக்குமுன் ஒன்று. ஒன்றோடொன்று இவ்வளவே. ஒன்றின் காரணம் இன்னொன்று என்று காண்பதில்லை. பகல்—இரவு மாறி மாறி வருகின்றன. ஆனால் இரவின் காரணம் பகல் எனலாமா? மின்னலும் இடியும் ஒன்றாக உண்டாகின்றன. ஒன்றின் காரணம் ஒன்று என்று சொல்வது எங்ஙனம்? ஆகையால் காரண காரியம் என்பது நம்முடைய வழக்கமே யொழிய பிரத்தியக்ஷமில்லை. பிரத்தியக்ஷமாகக் காணாத வஸ்துக்கள் நம்முடைய இருப்பு, கடவுளின் இருப்பு. ஆகையால் இவைகளையும் உண்மையாகக் கொள்ள முடியாது. இதைச் சற்று ஆராய்வோம். நம்மை எடுத்துக்கொள்வோம். நம்முடைய அனுபவங்கள் ஒன்றின்பின் ஓடிக்கொண்டே இருக்கின்றன. நம்மைப்பற்றி நாம் அறிவது நம்முடைய அனுபவங்களே. நம்முடைய அனுபவங்க ளன்றி நமக்கு இருப்பில்லை. அந்தந்த க்ஷணத்தில் அனுபவிக்கும் அவஸ்தைகள் சேர்ந்து 'நாம்' என்று நினைக்கிறோம். ஆனால் இவ் வனுபவங்களை ஒருங்கே சேர்ப்பது தவறு. பிரத்தியக்ஷமாகக் காணுவதில்லை. அதை எப்படி ஒன்றாகக் கூட்டலாம்? இரவு படுத்து நித்திரை செய்கிறோம். காலையில் எழுந்தவுடன் நாம் தான் இரவு படுத்துக்கொண்டோ மென்று எவ்வாறு அனுமானிக்கலாம்? கூடாது. நம்முடைய அனுபவங்கள் ஒன்றின்பின் ஒன்றாக உண்டாகின்றன. ஒன்றை ஒன்று உண்டாக்குவதில்லை. இதேமாதிரி, கடவுள் ஒரு திட்டமும் செய்யவில்லை. அவரைப் பிரத்தியக்ஷமாகக் காணாதவரையில் அவர்தான் உலகத்தை நிலைநிறுத்துகிறாரென்று எவ்வாறு கூறுவது?

ஒவ்வொருவரும் அறிவது அவரவர் மனத்தில் படும் அனுபவங்களையே யொழிய பொது உலகத்தையல்ல. பொது உலகந்தான் இருக்க முடியாதென்று ஏற்படுகிறதே. ஒவ்வொரு மனிதனும் தனது அனுபவங்களைத் திரட்டியெடுக்க முடியாதென்றும் தெரிகிறது. மேலும் ஒவ்வொருவனுடைய அனுபவமும் ஒவ்வொரு மாதிரியாக இருப்பதால், ஒருவருக்குச் சரியென்று தோன்றுவது இன்னொருவருக்குத் தப்பாகத் தோன்றும்.

இவைகளிலிருந்து என்ன தீர்மானத்திற்கு வரவேண்டி யிருக்கிறது? நாம் ஒன்றையும் அறியமுடியாது. அறிந்தாலும் சரியா தப்பா வென்று பரி

---

படிப்பு அறிவிற்கான உபகரணங்களை மட்டுமே உதவும். படிப்பதை நமதாக்குவது சிந்தனையே. நாம் அசைபோடும் இனத்தைச் சேர்ந்தவர். விஷயப் பெருஞ்சுமை யொன்றை நம்மிடம் திணித்துக்கொண்டால் மட்டும் போதாது. அதை மறுபடியும் சுவைத்தாலன்றி அது நமக்கு போஷணையும் பலமும் அளியாது.

சோதிக்கமுடியாது. அப்படிப் பரிசோதிக்க 'நாம்' என்று ஒரு பொருள் இல்லை. கடவுளுமில்லை: என்னமோ மனிதன், என்னமோ உலகம், என்னமோ அனுபவம் என்றார் ஹியூம்.

லாக் உலகம் மனம் இரண்டும் மெய்; உலகமின்றி மனத்திற்கு ஞானமுண்டாகா தென்றார். அதாவது அவருக்கு உலகம் பிரதானம். பார்க்ளீக்கு மனமே பிரதானமாய்த் தோன்றிற்று. மனமின்றி வஸ்துக்கள் இருக்கமுடியாதுதான். ஆனால் மனத்தினுள்ளேயே இருக்கும் எண்ணங்கள் அனுபவங்களாகிய இவையே உண்மை. ஆனால் இவ்வனுபவங்கள் ஒன்றோடொன்று சம்பந்தப்படாமல் நிற்கின்றன. இவற்றினின்றும் என்ன ஞானமுண்டாகப் போகிறது? ஒன்றையுமே அறிய முடியாது! உவமையாக லாக் உலகத்தைக் கட்டினார், பார்க்ளீ மனத்தைப் பலப்படுத்தினார், ஹியூம் இரண்டையும் இடித்துத் தள்ளி மனிதனுக்கு ஒன்றும் அறிய முடியாதென்று தீர்மானித்தார்.

மேனாட்டுத் தத்துவம் இத்தனை தூரம் சென்றபின் மறுபடியும் தன் நிலையை அடைந்தது. இம்மானுவெல் காண்ட் என்னும் ஜெர்மன் தத்துவ ஞானியின் விசேஷ தத்துவத்தை இன்றும் ஆராய்ந்துகொண்டிருக்கின்றனர். தினந்தோறும் ஒவ்வொரு வேலையையும் குறித்த நேரத்தில் தவறாது செய்து முடித்து விடுவார். காலையில் எழுந்திருப்பது, உண்பது, படிப்பது, உலாவப் போவது எல்லாம் ஒவ்வொரு நேரத்தில் செய்து முடிப்பார். இவர் சாயங்காலம் நாலரை மணிக்குத் தவறாது உலாவப் போவதைப் பார்த்து அவ்வூர் ஜனங்கள், இவர் கிளம்பினவுடன் மணி நாலரை ஆயிற்றென்று கடிகாரங்களைத் திருப்பிக் கொள்வார்களாம்! உருவத்தில் இவர் சர்வ சாதாரணமாயிருப்பினும், இவருடைய தத்துவத்தின் விசேஷத்தை அளவிடமுடியாது. இதை இன்னொரு கட்டுரையில் ஆராய்வோம்.



இல்லாத குணங்களுக்காக இளவரசரைத் துதிப்பது தண்டனை சாராவண்ணம் பழிக்கும் முறையாகும்.

# தமிழ்ப்பாஷைச் சிறப்பு.

(தே. அ. இராஜரத்தினம் பிள்ளை.)

(232-ம் பக்கத் தொடர்ச்சி.)

அங்ஙனம் அதிகமாய் விரவியிருப்பதைக் காண்கிலேம். சில சமஸ்கிருத பதங்கள் தமிழ்ப்பாஷையிற் கலந்து வழங்கி வருவது உண்மையே. ஆதலால் தமிழ் சமஸ்கிருதத்தினின்றும் உற்பத்தியாயிற்றென்று எவ்வாறு கூறலாகும்? தற்காலத்தில் வழங்கும் தமிழ்ப்பாஷையில் ஆங்கிலம் இந்துஸ்தானி தெலுங்கு முதலிய பல்வேறு பாஷைகளிலுள்ள பல பதங்கள் கலந்து வழங்கி வருகின்றன வென்பதை யாருமறிவர். அதனால் தமிழ்ப்பாஷை அப்பாஷைகளிலிருந்து உற்பத்தியாயிற்றென்று கூறி விடலாமா? இது மொட்டைத்தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோடுவதை ஒக்கும்.

இன்னும் உற்று நோக்குமிடத்து வடமொழியி லில்லாத புணர்ச்சி இலக்கணங்களும், வினைத்தொகை, குறிப்புவினை முதலிய சொல்லிலக்கணங்களும், பால் விகுதிகளும் ஐந்திணையியல்புகளும், அவற்றின் துறைகளும், வெண்பா கலித்துறை முதலிய செய்யுளிலக்கணங்களும் தமிழ்ப்பாஷைக் குளவாதலாலும், இவை யனைத்தும் பிற்காலத்துத் தோன்றாது முதனூலாகிய பேரகத்தியத்தின் கண்ணே கூறப்பட்டிருத்தலானும் தமிழிலக்கணமும் சமஸ்கிருதவிலக்கணமும் வெவ்வேறென்பது தெள்ளிதிற் புலப்படுகின்றது. தமிழ்மொழியை நன்குணர்ந்த பேரறிஞர்களும் தமிழ் தற்பாஷை என்றே கருதுகின்றனர்.

வடமொழி தென்மொழி மகோததி பருகிப்
படிமிசைத் தமிழ்மகா பாடியம் வகுத்துக்
குசைநுனி யதனினுங் கூரிய மதிபெறீஇத்
திசையெலாந் தன்பெரு மிசைநெறீஇ உயர்ந்த

சிவஞான யோகீஸ்வரர் நாம் முன்கூறியுள்ள பாடலால் இவ்விரு பாஷைகளும் வெவ்வேறென்றும் சமமென்றும் கூறியுள்ளார். பிற்காலத்தி லெழுந்த பற்பல தமிழாசிரியர்களும் வித்துவான்களும் தமிழ் இயல்பாகவே சமஸ்கிருதக் கலப்பில்லாதவோர் தனிப்பாஷை யென்று கூறி யிருக்கின்றனர். திருவனந்தைச் சுந்தரம்பிள்ளை போன்ற சிலர் தமிழ் தற்பாஷை என்பதோடு மாத்திரம் நின்று விடாது, சமஸ்கிருதம் வருமுன் தமிழ்ப்பாஷையே இந்தியாவில் வழங்கின பூர்வபாஷை யெனக் கூறுவர்.

"சதுமறையா ரியம்வருமுன் சகமுழுதும் நினதாயின்
முதுமொழி நீ யநாதியென மொழிகுவதும் வியப்பாமே"

என்று மேற்கூறிய சுந்தரம்பிள்ளை கூறியதும் காண்க. ஆதலின் தமிழ் சமஸ்

---

வீண் சொற்கள் விஷயங்களைப் பழுதாக்குகின்றன.

கிருதத்தினின்றும் உற்பத்தியானதன் றென்பதற்கு எட்டுணையேனும் சந்தேகமில்லை.

தமிழ்ப்பாஷை தனிப்பாஷை யென்னு மபிப்பிராயங் கொண்டு தம் வாணுளெல்லாம் தமிழின் அபிவிருத்திக்காகவே அதிகமாயுழைத்த ஸ்ரீமான் ராவ்பகதூர் சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்கள் அப்பாஷையின் கால வர்த்தமானத்தை எட்டுப் பிரிவாகப் பிரித்திருக்கின்றனர். முதலாவது அபோதகாலம். இஃது தமிழ்ப்பாஷை வரிவடி வில்லாமல் ஒலி வடிவில் மாத்திரம் நின்றகாலம். இரண்டாவது அட்சரகாலம். இஃது அப்பாஷைக்கு அட்சர மேற்பட்ட காலமென்பர். மூன்ருவது இலக்கணகாலம். இஃது அப்பாஷைக்கு இலக்கணங்கள் இயற்றப்பட்டகாலம். முன்பு ஒலிவடிவாயும் பின்னர் வரி வடிவாயும் எழுந்த தமிழ்மாதுக்கு அகத்தியர் தொல்காப்பியர் முதலினோர் அகத்தியம் தொல்காப்பியம் முதலிய விலக்கண நூல்களை இக்காலத்தியற்றி அவளை அணிபெறச் செய்து மகிழ்ந்தனர். நான்காவது சமூதாய காலம்; இஃது முதல் இடைகடை என்னும் முச்சங்கத்தார் காலத்தையும் குறிக்கும். இக்காலத்தில் இயற்கை அழகோடு செயற்கை அழகும் பெற்ற தமிழ் மாது மதுரைச் சங்கமாம் நாயகனை மணந்து ஆடையாபரணாலங்காரம் பெற்றுப் பெருஞ்சீரும் சிறப்பு முற்றனள். இச்சங்கத்தார் மேற்கூறிய விலக்கண மணிகளோடு பின்னு மநேகமான தத்துவ சாஸ்திர நூல்களையுமியற்றி அவளை அணிபெறச் செய்து மேன்மேலும் சிறப்பித்தனர். இதுவே தமிழ்ப்பாஷை உச்சநிலை யடைந்தகாலம். ஐந்தாவது அநாதாரகாலம்; இஃது தமிழ்மாது ஆதரவற்றுத் தன் சிறப்புக் குன்றியகாலம். தட்சண மதுரையின் கண்ணே யிருந்த சங்கஸ்தானம் கபாடபுரத்துக்கு மாற்றப்பட்டபோது தமிழ் மாது தனக்குரிய எண்ணிறந்தனவாகிய அணிகலன்களோடும் சென்று அங்குக் குலாவுவாளாயினள். ஆயினும் கபாடபுரம் ஆழிவாய்ப் பட்டழியவே அக்காலத்து அரிய பெரிய தமிழ்நூல்கள் யாவும் ஒருங்கே இறந்தனவாக அப்பெரும் விபத்தினின்றும் தப்பிய பண்டைத் தமிழ்நூல்கள் மிகச் சிலவேயாம்.

கபாடபுரம் சமூத்திரத்தால் அழிவெய்தியதற்கு முன்னர்ச் சங்க மருவிய நூல்களா யிருந்தவை எண்ணாயிரத்து நூற்று நாற்பத் தொன்பதென்று சங்கப் புலவருள் ஒருவரான நக்கீரர் கூறி யிருக்கின்றனர். இணையிலாப் பாஷை யென்றிறுமாப் படைந்த தமிழுக்கு இஃது ஓர் பேரிடியே போலும்! பின்னர் கடைச் சங்கத்தார் காலத்தில் தமிழ்மாது சிறிது சிறப்பெய்தினளேனும், அச்சங்க மொழியவே அவள் ஆதரவொன்றின்றிச் சேரசோழ பாண்டியர் அவைக்களத்து மன்னிச் சற்றுத் தலைகவிழ்ந்தனள்.

ஆருவது சமணருடையகாலம். இக்காலத்தில் தமிழ்மாதின் பரிதாப நிலையை யுணர்ந்த பௌத்த சமண வித்துவான்கள், தமிழிலே சிறந்த இலக்கியமெனக் கற்ரோர் யாவரானும் கருதப்படும் சீவகசிந்தாமணி சிலப்பதிகாரம் மணிமேகலை வளையாபதி குண்டலகேசி ஆதியாம் பெருங்காப்பியங்களையும், சூளாமணி, நீலகேசி, உதயணன்கதை நாககுமார காவியம், யசோதர காவியம் முதலியசிறுகாப்பியங்களையும், நிகண்டு நன்னூல் காரிகை ஆதி

---

மனித மனத்தின் தலைசிறந்த சிருஷ்டிகள் பூரணத்தில் மிகக் குறைந்தன என்பது முற்றிலும் நிச்சயம்.

யாஞ் சிறுகிரந்தங்களையுமியற்றி அவளை மகிழ்வித்தனர். இவர்கள் காலத்துக் கடுத்த இதிகாச காலத்தும் கம்பர் ஒட்டக்கூத்தர் முதலிய கவிவாணரும் சைவசமய பரமகுரவரும் சந்தானுசாரியர்களும் தோன்றிப் புராண காவியங் கள் சமயாசாரதத்துவ நூல்கள் பற்பல ஸ்தல புராணங்கள் முதலியவற்றை யும் சமஸ்கிருதத்தினின்றும் மொழி பெயர்த்தனவாய அனேக பிறநூல்களை யும் இயற்றுவா ராயினர்.

ஆகவே பதின் மூன்றும் நூற்றுண்டளவில் தமிழ்மாது பெரும்பான் மையும் தன் பண்டைச் சிறப்பெய்தித் தொல்காப்பியமே இரத்தின கிரீட மாகவும், நீலகேசியே இருண்டு பரந்த கேசமாகவும். சூளாமணியே சிகையின் கண் தரிக்கப்பெறும் இரத்தினப் பிறையாகவும், தேவாரமே தெய்விக மாலை யாகவும், குண்டலகேசியே சிறந்த காதணியாகவும், வளையாபதியே கைவளை யாகவும், மணிமேகலையே கனமணி யழுத்திய தங்கமேகலாபரணமாகவும், சிலப்பதிகாரமே காற்சிலம்பாகவும், திருக்குறள் ஈரடியே இணையாகவும், திரு வாசகமே திருவாக்காகவும், திருவிளையாடலே திருவிளையாட்டாகவுங் கொண்டு தன் திருவாயினின்றும் தமிழ்க்கீர்த்தன மாறியாங் காணுமிர்தஞ் சொரியத் தமிழ்நாடென்னு மரங்கத்து நின்று நர்த்தனஞ்செய்து பார்ப்போர் மனதைப் பரவசப்படுத்தினள்.



வண்டுக்குக் குடிசையில் பூக்கும் ஒரு மலரில்கூடத் தேன் கிடைத்து விடும். வண்ணாத்திப் பூச்சிக்கு அரசர் தோட்டத்தில் கூட அணுவளவு தேனும் அகப்படமாட்டாது.

# "அங்கதன் அருந்திறல்"

(தோ. மு. பாஸ்கரத் தொண்டைமான், பீ. ஏ.)

"அன்பு அறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு
இன்றியமையாத மூன்று"

என்பது வள்ளுவர் இன்குறள். பண்டைத் தமிழகத்தின் அரசியலை, ஐம் பெருங் குழுவும் எண் பேராயமும் அழகு செய்தன என்பதைச் சரித்திரம் உணர்ந்த பலரும் அறிவர். ஐம்பெருங்குழுவின் ஒரு பகுதியினராய் அமைந்த தூதுவர்க்கு, தாம் அண்டி வாழும் அரசனிடத்து அன்புடைமையும், அவனுக்கு ஆங்காரியங்களை அறியும் அறிவுடைமையும், அவைகளை மாற்றாரிடத்துச் சொல்லும்போது ஆராய்ந்து சொல்லுதற்குரிய சொல்வன்மையும் இன்றியமையாது வேண்டப்படும் குண நலமாகும் என்று தமிழ்ப் பெரு மகனும் வள்ளுவர் இலக்கணம் கூறுகின்றார். இவ்விலக்கணத்திற்குப் பொருத்தமாய் அமைந்த தூதுவர் கவியரசர் கம்பர் கவிதையில் அநுமனும் அங்கதனுமாவர் என்று கூறுவது மிகையாகாது.

வானர நாட்டின் வீரனாய் விளங்கிய வாலியின் மைந்தனாய் அங்கதன் அமைந்து வாழ்கின்றான். கடல் கடைந்த வெங்கரதலங்களையுடைய வாலி இராமனது அம்பிற்கு இலக்காகி, அமர்க்களத்திடை அலமந்து வீழ்ந்து கிடப்பதைக் கண்ட அங்கதன் அகங்குழைந்து அழுகின்றான்.

"தறையடித்தது போல் தீராத் தகைய வித்திசைகள் தாங்கும்
கறையடிக் கழிவு செய்தகண் டகன் நெஞ்சமுன்றன்
நிறையடிக் கோல வாலின் நிலைமையை உன்னுந்தோறும்
பறையடிக்கின்ற அந்தப் பயமறப் பறந்தவன்றே"

என்றும்,

"குலவரை நேமிக் குன்றமென்று வானுயர்ந்த கோட்டின்
தலைகளும் நின் பொற்றோளிற்றழும் பினில் தவிர்ந்தவன்றே
மலை கொளுமரவும் மற்றும் மதியமும் பலவுந்தாங்கி
அலைகடல் கடைய வேண்டின் ஆரினிக் கடைவரையா"

என்று கலங்கி யழுது, தன் தாதையின் அரிய செயல்களின் அருந்திறன் அறிந்து போற்றும் அங்கதன் உள்ளம் கற்றார் உளத்திற்கு களிபேருவகை தருவதாகும். மருமத்திடை ஊறு தாங்கி மயங்கிக் கிடக்கும் வானர வீரன் தன் அருமை மகனை அன்புடன் அழைத்து அவனுக்குத் தேறுதல் மொழிகள்

---

பிறர் கூறுவதற்குச் செவிசாய்க்க அறிந்துகொள். தவறாய்ப் பேசுவோர்களிடமிருந்து கூடப் பலன் பெறுவாய்.

பல கூறி இராமனது பெருமையினை எடுத்துரைத்து அவனை "மால் தரும் பிறவி நோய்க்கு மருந்தென நினைந்து அவனடி வணங்கி வாழ்வாயாக" என்று ஆசிகூறுகின்றான். இத்துடன் தன் அருமந்த மகனை, பொய்யுடை உள்ளத் தார்க்குப் புலப்படாப் புலவனிடம் அடைக்கலம் என்று ஒப்புவித்துப் பின் உயிர் நீத்தனன் என்பர் கவியசரர். அங்கதனும் தந்தையின் மொழியைத் தலைமேற் கொண்டு, இராம வீரனது பாதம் பணிந்து அவனது பணியாற்று தலே தன் பெருந்தவம் என நினைந்து ஒழுகுவானானான்.

இராமனது பணியைத் தலைமேற்கொண்ட அங்கதன் சிறையிருந்த செல்வியாம் சீதையைத் தேடும் செம்மைசான்ற செயலில் ஈடுபட்ட வானர வீரர்களில் தென் திசை நோக்கிச் செல்லும் தானைத்தலைவனாய் அமைந்து புறப்படுகின்றான். இவனுடன் சேர்ந்த வீரர் அனைவரும் காடும் மலையும் கடந்து, மகேந்திர மலையின் அடியில்வந்து சேர்கின்றார்கள். இதுவரை புகை புகா வாயிலும் புகுந்து தேடிச் சீதையைக் காணாது அகம் நொந்து அங்கதன் குழைந்து சாய்கின்றான். தான் ஏற்ற பணியைச் செய்து முடிக்க வலிமை யற்று, இராமனிடம் சென்று சீதையை எங்குந் தேடியும் காணவில்லை என்று சொல்லி அவனுக்குத் துயர் விளைவிப்பதைவிடத் தான் உயிர்துறந்து விடு தலே சிறந்ததென வீரன் கருதுகின்றான்.

"எந்தையு முனியும் எம்மிறை இராமனும்
சிந்தனை வருந்து மச் செய்கை காண்குறேம்
நுந்து வென்னுயிரினை நுணங்கு கேள்வியீர்
புந்தியினன்னது புகல் விராம்."

என்று அங்கதன் அலமந்து கூறும் உரை சாலவும் அழகுடையதாகும். பின்னும் சாம்பன் முதலியோரிடம் கலந்து ஆலோசிக்கு மளவில், தான்புரிய விரும்பிய செயல் நன்றன்று என்பதை உணர்கின்றான். தான் ஏற்ற பணியில் வெற்றி பெறாது மாண்டதை அறிந்தால் தாயாகிய தாரையும் தந்தையாகிய சுக்ரீவ னும் உயிர் துறப்பர். அவ்விருவரும் உயிர்துறந்ததைக் கண்டு மனம்பொறாது, இராமனும் இலக்குவனும் உயிர்துறக்க நேரிடலாம். இவ்விரு வீரரும் உயிர் துறக்கநேரின், அயோத்தியில் அமைந்து அருந்தவம் புரியும் அண்ணலாகிய பரதனும் இளையகோவும், மற்றுளோரும் உயிர் தரித்திருப்பர் என்பது ஐயமே யாகும். ஆகவே சீதையெனும் ஒரு பெண்ணால் எத்தனை பேர் நைந்து வருந்துகின்றார்கள் என்பதை ஆழ்ந்து அறிந்து அடங்குகின்றான் அங்கதன்.

"எல்லை நம்மிறுதியாய்க்கும் எந்தைக்கும் யாவரேனும்
சொல்லவுங்கூடும் கேட்டாற்றுஞ்சவும் மடுக்கும் கண்ட
வில்லியும் இளையகோவும் வீவது திண்ணம் அச்சொல்
மல்லனீர் அயோத்தி புக்கால் வாழ்வரோ பரதன் மற்றோர்"

"பரதனும் பின்னுளோனும் பயந்தெடுத்த வருமூவரும்
சாதமே முடிவர்கெட்டேன் சனகியென்றுலகஞ் சாற்றும்

---

படிப்பின் நோக்கம் ஆட்சேபம் செய்தல், ஆராயாது நம்பிக்கை கொள்ளுதல், வாதம் செய்தல் இம்மூன்றும் அல்ல. ஆய்ந்து சீர்தூக்கித் தீர்மானித் தலே.

விரதமாதவத்தின் மிக்க விளக்கினால் உலகத்தியார்க்கும்
கரைதெரி விலாததுன்பம் விளைந்தவாவெனக் கலுழ்ந்தான்."

எனக் கவியரசர் கவியாற்றுகின்றார். இந்த நிலையில் இவர் முன் சடாயுவின் தமையனான சம்பாதி தோன்றி.

" பாகொன்று குதலை யாளைப் பாதக அரக்கன் பற்றிப்
போகின்ற பொழுதுங் கண்டேன் புக்கனன் இலங்கை புக்கு
வேகின்ற உள்ளத்தாளை வெஞ்சிறை யகத்து வைத்தான்
ஏகொன்றிற் காண்டி ரந்தி லிருந்தனள் இறைவி யின்னும்"

என்று சீதையின் நிலையை எடுத்துரைத்ததைக் கேட்ட அங்கதன் மனந் தேறி அநுமனை இலங்கைக்கு அனுப்பி அவன் இலங்கை சென்று திரும்பி வருமளவும் இராமன் முன் செல்ல இசையாது மலையடியிலேயே இனிதிருக்கின்றனன்.

"ஈரமென்றொரு பொருள் இலாத நெஞ்சினர்" வாழும் இலங்கையில் அசோக வனிதையில் அணங்கைக் கண்டு அயலார் ஊரைத் தீக்கிரையாக்கித் திரும்பிய அநுமனைக் கண்ட அங்கதன், தாய் வரக்கண்ட தன்ன உவகையில் தளிர்த்தான். சீதையைக் கண்டு அவளிடம் அநுமன் அடையாளம் பெற்று வந்ததை அறிந்த நற்செய்தியை இராமனுக்கு அறிவிக்க உடனே புறப்படுகின்றான். இவனுடன் புறப்பட்ட வானர வீரர்கள் அங்கதன் அநுமதிபெற்று அருகேயிருந்த மதுவனத்தில் புகுந்து, அவரவரால் இயன்றமட்டும் மதுவை மாந்தி மகிழ்ந்தனர். மதுவனம் அழிந்ததை அறிந்த ததிமுகன், அங்கதனுடன் பொருது அல்லற் படுகின்றான்.

"மதுவனந் தன்னை யின்னே மாட்டுவித் தனைநீ யென்னுக்
கதுமன வாலிசேய்மே லெறிந்தனன் கருங்கற் பாறை
அதுதனைப் புறங்கையாலே யகற்றி அங்கதனுஞ் சீறித்
ததிமுகன் தன்னைப் பற்றிக் குத்தினன் தடக்கை தன்னால்."

என்று கவியரசர் கூறும் செம்மைசான்ற சொற்கள் அங்கதனது வலியை ஒருவாறு விளக்குவதாகும். பின்னர் கதிரோன் மைந்தன் தன்னைவந்தடைந்த ததிமுகனுக்குச் சமாதானம் பலகூறி அனுப்பவும் ததிமுகனும் தன் தவற்றை உணர்ந்து வாலி சேயைத் தொழுதபோது அவனும் மயக்கம் தெளிந்து அவனை யெடுத்து மார்புடனணைத்து "உம்மையான் சூழ்ந்ததும் பொறுக்க" எனப் பணிந்து கூறினன். தான் அரசிளங் குமாரன் என்னும் அகந்தையிலாது அங்கதன் ததிமுகனிடம் தாழ்ந்து கூறிய சொற்கள் அவன்றன் சிறந்த உள்ளத்தின் பெருமையை இனிது விளக்குவதாகும்.

இனி, கடல் கடந்து இலங்கை சென்ற இராமன், போர் தொடங்குமுன் அரசியலுக்கு மாறுபடாத முறையில் தூதனுப்ப எண்ணுகின்றான். "தன் செய்ய செங்கைத்தனுவென" விளங்கும் அநுமனையே தூதனுப்ப முதலில்

---

உயர்ந்தோர் அனைவரும் தங்கள் உயர்விற்கான குணங்களைத் தங்கள் தாயிடமிருந்தே பெறுகின்றனர். விலக்குகள் அறியா விதி ஏதேனும் உண்டேல் அது இதுவே.

இராமன் எண்ணினனேனும், பின்னர் மாருதி முன்னம் ஒரு தரம் தூது சென்று செயற்கருஞ் செயல்கள் பல நிகழ்த்தி மீண்டவன்; அவனையே திரும்பவும் அனுப்பினுல் இவனைத் தவிர வலியுடையார் வானரப் படையில் ஒருவரும் இலர் என்று பலர் கருத இடந்தரும்; ஆதலில் அவனை யொத்த ஆற்றல் பொருந்திய அங்கதனையே அனுப்புவோம். வீரஞ்செறிந்த அங்கதன் ஒருவனே பகைவர் அறந்தவறித் தூதனுக்கு இடையூறு செய்தகாலத்தும் அவர்களிடம் போர் செய்து வெற்றிபெற்று மீளும் ஆற்றல் படைத்தவன் என்று கருதி அங்கதனையே தூதுவனுக அனுப்ப விரைகின்ருன்.

"மாருதி யின்னுஞ் செல்லின் மற்றிவனன்றி வந்து
சாருதல் வலியாரில்லை யென்பது சாலுமன்றே
யாரினியேகத்தக்கார் அங்கதன் அமையும் ஒன்னர்
வீரமே விளைப்பரேனும் தீதின்றி மீடல் வல்லான்"

என்று இராமன் கூறும் நயஞ்சான்ற சொற்கள் அங்கதனது ஆற்றலை அளவிட்டுரைக்கப் போதிய சான்ருகும். அங்கதனும்,

"மாருதி அல்லனுகில் நீயெனும் மாற்றம் பெற்றேன்
யாரினி என்னேடொப்பார்."

என்று தன் தலைவன் தனக்கிட்ட பணியின் பெருமையினை நினைந்து நினைந்து இன்ப முறுகின்ருன்.

தூது சென்ற அங்கதன், கொடுந்தொழில் மடங்கல் அன்னுன் எதிர் சென்று நின்றதும் "இவண் வந்த நீ யார் உன் கருமம் என்ன', என்று அரக்கர்கோன் வினவ அதற்கு,

"பூத நாயகன் நீர்சூழ்ந்த புவிக்கு நாயகன் அப்பூமேல்
சீதை நாயகன் வேறுள்ள தெய்வ நாயகன் நீ செப்பும்
வேத நாயகன் மேனின்ற விதிக்கு நாயகன் தான்விட்ட
தூதன் யான் பணித்த மாற்றம் சொல்லியவந்தேன்"

என்று தன் தலைவனது பெருமையையும் தான் கொண்ட கருமத்தையும் நலஞ்சான்ற மொழிகளால் நவின்ருன்.

"இந்திரன் செம்மல் பண்டோர் இராவணன் என்பான் தன்னைச்
சுந்தரத் தோள்களோடும் வாலிடைத் தூங்கச் சுற்றிச்
சிந்துரக்கிரிகள் தாவித் திரிந்தனன் தேவருண்ண
மந்தரக்கிரிபால் வேலை கலக்கினுன் மைந்தன்."

என்று தன்னை இராவணனிடம் அறிமுகப்படுத்தும் வாயிலாய் அங்கதன் கூறும் அழகிய மொழிகள் அங்கதனது புகழ் குன்ருத பெரு வலியையும் அவனது மனத்திட்பத்தையும் பெரிதும் விளக்குவனவாகும். அங்கதன் வரலாறு உணர்ந்த அரக்கர்கோன் இவனை இராமனிடம் இருந்து பிரித்துத் தன்பால்

---

குணமாகத் திருத்த முடியாத குற்றமும்—குற்றமாக இழிந்துவிடாத குணமும் நாம் இயற்கையிடம் பெறுவதில்லை. குற்றங்களில் இரண்டாவது வகையே குணமாக்க மிகக் கடினமானவை.

சேர்த்துக்கொள்ள விரும்பிச் சூழ்ச்சி மொழிகள் பல சொல்லியும் அதற்கிணங்காது,

"வாய்தரத்தக்க சொல்லி யென்னையுன் வசஞ் செய்வாயேல்
ஆய்தரத்தக்க தன்றோ தூது வந்தரச தாள்கை
நீதரக் கொள்வன் யானே யிதற்கினி நிகர் வேறெண்ணின்
நாய் தரக்கொள்ளுஞ்சீய நல்லரசு"

என்று இகழ்ந்து கூறி அவன்றன் ஏழை மதியை நினைந்து நகுகின்றான். தன் முயற்சி பயன்படாதது கண்ட இலங்கை வேந்தன் இவனிடம் நீ வந்த காரியம் உரையென்று சொல்ல, அதற்கு அங்கதன் "தேவியை விடுக, அன்றேல் செருக்களத் தெதிர்ந்து தன் கண் ஆவியை விடுக" என்று அஞ்சாது கூறும் மாற்றம் போற்றத்தக்கதொரு பொருளாகும். இதற்கு இராவணன் இசையாது, இறுமாந்து சொன்ன சொற்களைக் கேட்ட அங்கதன் மீண்டும் இராமனை யடைந்து, அரக்கர்கோன் உள்ளக் கருத்தை அண்ணலுக் குரைத்து "மூர்க்கன் முடித்தலை அற்றபோதன்றி ஆசையறான்" என்று அழகாக எடுத்துரைத்து மகிழ்ந்தான். தூதுவனுக்கு இன்றியமையாத, அன்பு, அறிவு, ஆராய்ந்த சொல்வன்மை இவையாவும் பொருந்திய தலைமகனாய் மட்டும் அமையாது, "இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவர்க்கு உறுதிப் பயப்பதாம் தூது" என்று வள்ளுவர் அருளிய பொய்யா மொழிக்குத் தலைசிறந்த சான்றாய் அமைந்து அங்கதன் புகழ்குன்றாத பெருமகனாய் இலங்குகின்றான்.

இனி வானர சேனைக்கும் அரக்கர் சேனைக்கும் நிகழ்ந்த போரில் அங்கதன் அஞ்சாத நெஞ்சொடும் எஞ்சாத வலியொடும் போர் புரிந்தபான்மையைக் கவியரசர் கம்பர் ஏற்ற இடந்தோறும் போற்றி யுரைக்கின்றார். இவ்வாறு போர் புரிந்த அங்கதன், இந்திரசித்தன் விடுத்த மலரவன் கணையால் மயங்கி வீழ்ந்ததைக் கண்ட இராமன் புலம்புகின்ற நிலையை,

"விடைக் குலங்களின் நடுவணோர் விடைகிடந் தென்னக்
கடைக்கண் தீயுக அங்கதக் களிற்றினைக் கண்டான்
படைக் கலங்களைச் சுமக்கின்ற பதகனேன் பழிபார்த்து
அடைக்கலப் பொருள் காத்தவாறு அழகிதென் றழுதான்."

என்று கவியரசர் கூறுகின்றார். வானர வீரனை வாலியால் தன்னிடம் அடைக்கலம் என்று ஒப்புவிக்கப்பட்ட அங்கதன் தனக்காக ஏற்ற ஒரு பணியில் மாண்டுமடிந்தனன் என்பதைக் கண்ட இராமன் அடைக்கலம் புகுந்த உயிரைக் காக்கத் தம் ஆருயிர் கொடுத்த ஆன்றோர் பெருமையையும் தன்னிடம் அடைக்கலமாக அளிக்கப்பெற்ற அங்கதனைத் தானிழந்த சிறுமையையும் எண்ணி யெண்ணி யேங்குகின்றான். ஆற்றல் மிகுந்த அநுமன் கொணர்ந்த அருமருந்தினால் உயிர்பெற்றெழுந்த அங்கதன் இளையவீரனுக்கு உற்றதுணைவனாய் இந்திரசித்தன் சென்றுள்ள நிகும்பலைக்குச் சென்று அங்கு இந்திரசித்திற்கும் இலக்குவனுக்கும் நேர்ந்த பெரும் போரில் இலக்குவனது துணையாய்

---

மனோவிகாரங்களே வாழ்வாகிய கப்பலைச் செலுத்தும் காற்று. அறிவே அதை நடத்தும் சுக்கான். கப்பல் காற்றின்றேல் நின்றுவிடும். சுக்கானின்றேல் தரைதட்டிவிடும்.

அமைந்து போர் புரிந்தான். இளைய வீரனது அம்பிற்கு இலக்காகி இந்திரசித்தன் தலையும் உடலும் வேறாகி மாநிலத்தில் மாண்டு விழுந்தபோது, அங்கதன் அவனது தலையினைத் தன் கைகளில் தாங்கி, இராமன் முன்னே விரைந்து வந்து சேர்ந்தான். இந்திரசித்தனது இணையற்ற வலியையுணர்ந்த இராமன்,

"தென் தலையாழி சூழ்ந்த திண்மதில் இலங்கை காக்கும்
புன்தலைக் கள்வன் பெற்ற புதல்வனை இளவல் வீழ்த்த
வன்தலையெடுத்து நீமுன் வருதலால் வானரேச!
என்தலை எடுக்கலானேன் இனிக் குடை எடுப்பேன்."

என்று அங்கதனிடம் அன்போடு கூறிய மொழிகள் அவன்றன் பெருமையை இராமன் மதித்துள்ள தன்மையை விளக்கும்.

அரக்கர் கோனையும் அரக்கர் சேனையையும் முடித்து வெற்றிபெற்று மீண்ட வீரனுடன் அங்கதனும் அயோத்தியை அணுகினான். அங்கு இராமன், திருமுடி சூடியபொழுது வானர வீரனை வாலியின் மைந்தன் உடைவாள் ஏந்தும் உரிமை பெற்றான் என்பது கருதற்பாலது. பின்னர் இராம வீரன் இவனுக்குத் தோளணி யொன்று அன்புடன் அளித்து விடை கொடுத்தனுப்பும் பான்மையை யாரே கணிக்கவல்லார். அங்கதனது அருந் திறலைப் போற்ற விரும்பி,

"அங்கதமிலாத கொற்றத் தண்ணலும் அகிலமெல்லாம்
அங்கதனென்னும் நாமம் அழகுறத் திருத்துமாபோல்
அங்கதங்கன்னற் றோளாற்கு அயன் கொடுத்ததனை யீந்தான்
அங்கதன் பெருமை மண்மேல் ஆரறிந்தறையகிற்பார்."

என்று நயஞ்சான்ற மொழிகளால் நல்லியற் கவிஞர் எடுத் துரைக்கின்றார்.

இதுவரை கூறியவற்றால், அங்கதன் வானர நாட்டின் வீரனாய வாலியின் ஒப்பற்ற திருமகனாக இலங்கி, இராமனது செம்மைசான்ற பணியை ஏற்று விளங்கிய பெருமகன் என்பதும், அவனது அஞ்சா நெஞ்சமும் எஞ்சாத வலியும் யாவரும் போற்றும் பெருமையுடையது என்பதும், அவன் அன்பு அறிவுடைமை ஆராய்ந்த சொல்வன்மை முதலிய இன்றியமையாத குணங்கள் நிறைந்து விளங்கி அதனால் ஒப்பற்ற தூதுவனாய் இலங்கினான் என்பதும் விளக்கமுறும்.



நன்றியறியாமையில் சகல இழிதகைமைகளும் அடங்கும். இதர துர்க்குணங்களோடு அன்றி அது ஒருபொழுதும் காணப்படுவதில்லை.

# மேனாட்டு விழுச் செல்வம்

(போ. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

1 ஆடையில் ஒரு முறை ஒரு கிழிவு ஏற்பட்டுவிட்டால் அதை ஒவ்வொரு ஆணியும் ஒவ்வொரு முட்செடியும் கிழித்துக் கொண்டே யிருக்கும். ஒரு முறை கீறிய கண்ணாடி சீக்கிரம் உடைந்துபோகும். மனிதனுடைய நற்பெயரும் அவை போன்றதே. அதிலும் நியாயமான வகையால் உண்டாகும் மாசு ஒரு முறை ஏற்பட்டுவிட்டால் போதும், அது சீக்கிரம் அழிந்து விடுவது நிச்சயம். பிஷப் ஹால்.

2 நீ படிக்கத் தீர்மானிப்பதின் அளவை உன் அவகாசத்திற்கும் அவாவிற்கும் தக்கபடி வரையறுத்துக் கொள். ஆனால் நீ படிப்பதின் அளவு சிறிதாயினும் சரி, பெரிதாயினும் சரி—நீ படிப்பது மட்டும் பலதிறப்பட்டதாயும் ஒன்றிற் கொன்று அதிக வேறுபாடுடையதாயு மிருக்கட்டும். ஒரே வகையான நூல்களைமட்டுமே படிப்பவன் எவ்வளவு ஆழமாய்ப் படித்தாலும் சரி, அநேகமாய் நிச்சயம் தாறுமாறாய்விடக்கூடிய அபிப்பிராயங்களையும், குறுகியதாய்மட்டு மில்லாமல் பொய்யாயுமுள்ள அபிப்பிராயங்களையுமே பெறுவான். மக்கள் அறிவுவளர்ச்சி சம்பந்தமாய் எனக்கு ஏதேனும் ஒரு அம்சத்தில் திடமான அபிப்பிராயம் இருக்குமானால் அது இதுவே. டாக்டர் ஆர்னல்டு.

3 "நாவன்மை" என்பது ஆன்மாவின் இடையீடில்லாத இயக்கமே யாகும். தற்காலம் அலங்காரமாய்ப் பேசுவோர் "நாவலர்" அல்லர். பலசொல் அடுக்கிப் பாமரரை மயக்க நன்கு பழக்கப்படுத்தப்பட்ட நாவினரே யாவர். விஸரோ.

4 கூறுவது முரணாகத் தோன்றினும்—அறிவில் முன்னேற்றம் அடைவதை நாம் அறிவதின் அளவு சுருங்குவதே காட்டும். ஹாமில்டன்.

5 பேருண்மைகள் அழகுடன் பிணைக்கப்படாவிடில் அநீதி செய்யப்பட்டனவாகும். அழகுடன் பிணைக்கப்பட்டு முறைப்படுத்தப்பட்டுவிட்டால் அவை நிச்சயமாய் ஆன்மாவிற்குள் ஆழப்பதிய வழி தேடிவிடும். சானிங்.

6 "ஆன்மப் பயிராக்"கத்தின் உபயோகம் யாது? அதற்குப் பரிபூரணம் அளக்கும் ஆன்ம அளவுகோல் ஒன்றுண்டு. அதன் உதவிகொண்டு அது ஐஸ்வரியத்தை ஒரு கருவியாகவே நம்மை மதிக்கச் செய்யும். அது செய்வதெல்லாம் "பொருள் எல்லாம் உபகரணங்களே" என்று சொல்லளவிலன்றி உண்மையாகவே உள்ளத்தில் அறியவும் உணரவும் தூண்டுவதாகும். மாதியூ ஆர்னல்டு.

---

*விஷயத்தை விளக்கமாக வரையறுத்துக் கூறமுடியும்பொழுது மட்டுமே நிச்சயமாய் அதை அறிவோம் என்பதைச் சகல கலைகளும் ஒப்புக்கொள்கின்றன.*

7 மூளையின் முன்புறம் (அறிவு) பின்புறத்தை (உணர்ச்சியை) உறிஞ்சி உலர்த்திவிடுமானால் கேடே. அறிவினால் மட்டுமே நன்மை பெற்றுவிட முடியாது. விசாலமான நெற்றிக்கே எப்பொழுதும் இறுதியில் வெற்றி. ஆனால் வெற்றி கிடைப்பது தலையின் பின்புறம் மிகப் பருமனாயுள்ள பொழுதே ஜே. ஆர். லவல்.

8 அறிவை விலைக்கு வாங்கமுடியும். ஆனால் உணர்ச்சி (அன்பு) ஒருநாளும் சந்தைக்கு வருவதில்லை. ஜே. ஆர். லவல்.

9 ஒவ்வொரு மனிதனும் தனக்கு இயற்கையில் அமைந்துள்ள குணங்களை எல்லாம் உபயோகிக்கும் வரையே உண்மையில் வாழ்பவனாகக் கருதப் படுவான். ஸர். டி. ப்ரௌண்.

10 விக்கிரகங்கள் சந்தேகத்திற்கு இடமாயும், வணங்குவோரின் இதயத் திற்கு (எவ்வித நல்லுணர்ச்சியுந் தரச் சக்தியற்ற) சர்வ சூன்யமாயும் ஆகும்பொழுதுதான் விக்கிரக ஆராதனை தவறாகும். கார்லைல்.

11 புனிதமான விஷயங்களை உணர்ச்சியின்றிக் கையாளும் வேஷதாரிகளே பெரிய நாஸ்திகர். அவர்களுக்கு இறுதியில் சூடுபோடுதல் அவசியம். பேக்கன்.

12 நாம் உண்மை என்று நம்புவதை ஒப்புக்கொள்ள மறுப்பவரை நாஸ்தி கர் என்று கருதுவது பெருந் தவறு. இழிவான நோக்கங் கொண்டு உண்மைக்குச் செவி சாய்க்க மறுப்பவரே நாஸ்திகர். சமயக்"கோட் பாடுகளை" எல்லாம் நம்புவதாய்க் கூறிக்கொண்டு சமய "ஒழுக்கம்" இல் லாதவன் நாஸ்திகரில் நாஸ்திகன். ஹெச். ஏ.

13 இழிஞன் ஏராளமாய்ப் பணம் படைத்திருப்பது இறைவன் ஒழுங்கு முறைக்கு இழுக்கன்றோ? இம்மியும் இழுக்கன்று. இழிஞன் அந்த லட் சியத்திற்காகவே தன்னை இழிஞனாக்கிக் கொண்டான். அவன் அதற் காகத் தன் ஆரோக்கியம், மனச்சான்று, சுதந்தரம் எல்லாம் இழந்து ளான். அவற்றைக் கொடுத்து அவன் வாங்கிக் கொண்டதற்காக நாம் பொறாமைப்படலாமோ? மிஸஸ். பார்பால்டு

14 இடுக்கண் அடையாதவனைப்போல இரக்கப்படத்தக்கவன் கிடையான். அவன் நல்லவனா தீயவனா என்று சோதிக்கப்படவில்லை. இயற்கையா கவே அமைந்த குணங்களுக்காக இறைவன் ஒருநாளும் முடிசூட்டுவ தில்லை. ஜெரிமி டெய்லர்.

15 நாம் அறநெறியில் நிற்கும் ஒவ்வொரு சமயத்திலும் ஏதேனும் இன்பம் அதிகரியாவிடில், ஏதேனும் துன்பம் குறைந்திருக்கும் என்பது உறுதி. பென்தம்.

16 புகழ் உயர்ந்தோர்க்கு ஊக்கம் அளிக்கும்; தாழ்ந்தோரின் இலட்சியம். கோல்டன்.

17 பிரபுவர்க்கம் எது?—உண்டாக்காமல் உண்பவர், உழையாது வாழ்ப வர், வகிக்கத் திறமையின்றி உத்தியோகங்களை வகிப்பவர், தகுதியின்றி கௌரவங்களை அபகரித்துக் கொள்பவர்—இவரே "பிரபுக்கள்." ஜெனரல் பாய்.

---

சித்திரங்கள் தொங்கும் அறை சிந்தனைகள் நிறைந்த அறையாகும்.

18 செயற்கை தவறலாம்; இயற்கை தவற இயலாது. ட்ரைடன்.

19 அழகுக்கு அணிகளாகிய அன்னிய உதவி தேவையில்லை. அணிகள் வேயாத பொழுதே அதிக அணிகள் வேய்ந்ததாகும்.' தாம்ஸன்.

20 அறத்தாறு நில், அஞ்சற்க, உன் லட்சியமெல்லாம் உன் தேசத்தை—உன் கடவுளை—உண்மையைப் பற்றியதாகவே இருக்கட்டும். அங்ஙனமாயின் நீ வீழ்ந்தாலும் நீ பாக்கியம் பெற்றுத் தியாகியாகவே வீழ்வாய். ஷேக்ஸ்பீயர்.

21 நன்றாய் எழுதப்பட்ட ஜீவிய சரிதம் நன்றாய் வாழப்பட்ட ஜீவியத்தைப் போலவே அரியதாகும். கார்லைல்.

22 நாம் பிறந்தவுடன் அழுகிறோம்—முட்டாள்களின் இந்தப் பெரிய நாடக மேடைக்கு வந்துவிட்டோம் என்று. ஷேக்ஸ்பீயர்.

23 துன்பமே மனிதனுடைய உண்மையான கட்டளைக்கல். போமண்ட்.

24 "அபாயம்"—பெரியோரை உயர்ந்த லட்சியங்களுக்கு ஊக்கும் தூண்டு கோல் சாப்மன்.

25 அவன் உலக முழுவதையும் எதிர்த்து நிற்க முடியும்—ஏனெனில் அவன் யாருக்கும் கடன்பட்டிருக்கவில்லை. லாங்பெலோ.

26 ஐயோ! பேயை அடக்குவதினும் எழுப்புவது எளிது. காரிக்.

27 கஷ்டங்களே மனிதனின் உண்மையான குணங்களை விளக்குவதாகும். எபிக்டெட்டஸ்.

28 நமது சந்தேகங்களே நமது துரோகிகள். ஆள்வினை செய்ய அஞ்சுவ தால் அநேக சமயங்களில் நாம் அடையக்கூடிய நன்மையை இழந்து விடும்படி செய்கின்றன. ஷேக்ஸ்பீயர்.

29 மனத்தைத் தேற்றிக்கொள். கண்களைத் துடைத்துக் கொள். சில சமயம் நாம் விழுவது அதிகச் சந்தோஷத்தோடு எழுவதற்கே. ஷேக்ஸ்பீயர்.

30 கடவுளே! மெய்ப்புகழ் அருளும். இன்றேல் ஒன்றும் வேண்டாம். போப்.

31 தீயவர் தம் குற்றங்களுக்குச் சமாதானம் கூறுவர். நல்லவர் தம் குற்றங் களை விட்டுவிடுவர். முதற் குற்றத்தைச் சரியென்று சாதிப்பவன் மூன் றாவது குற்றம் செய்பவனாவான். பென் ஜான்ஸன்.

32 முட்டாள்கள் தவறு செய்தால் அதனால் அவர்க்கு விளையும் தீமையி னின்று அவர்களைக் காப்பாற்றிவிட்டால், உலகத்தை முட்டாள்களால் நிரப்பியவர்களாவோம். ஹெர்பர்ட் ஸ்பென்ஸர்.

33 எப்பொழுது நாம் "அதிர்ஷ்டத்"தை அதிகமாக விரும்புகின்றோமோ, அப்பொழுது அவள் நம்மை அதிகமாக அதட்டிப் பார்க்கின்றாள். ஷேக்ஸ்பீயர்.

---

மனம் ஒரு பெட்டியை ஒக்கும். ஒழுங்காக அடுக்கினால் அதற்குள் அநேகமாக ஒவ்வொரு வஸ்துவையும் வைத்துவிடலாம். ஒழுங்கின்றேல் எதை வைப்பதும் அரிதாய்விடும்.

34 பெரியோர் அடைந்து அனுபவிக்கும் உயர் ஸ்தானங்கள் திடீரென்று பெறப்பட்டவை அல்ல. பிறர் தூங்கும்பொழுது அவர் இரவில் இடைவிடாது வேலை செய்தவராவர். லாங்பெலோ.

35 நாணயத்தை இழந்தவன் இழப்பதற்கு வேறொன்றும் இல்லாதவனுவான். லெலி.

36 ஒவ்வொருவனும் உயிரை உயர்ந்ததாகவே கருதுகிறுன். ஆனுல் வீரர் உயிரினும் மானத்தையே உயர்ந்ததாகக் கருதுவர். ஷேக்ஸ்பீயர்.

37 நூலறிவு "பேசும்"—மெய்யறிவு "கேட்கும்." ஹோம்ஸ்.

38 "வக்கீல்" யார்?—உன் சொத்தை எதிரியினிடமிருந்து பிடுங்கித் தனக்கு வைத்துக்கொள்ளும் கனவான். புரூஹாம் பிரபு.

39 ஜனசமூகம்!—எத்தனை மூடர் சேர்ந்து ஒரு ஜனசமூகம்! ஷாம்பர்ட்.

40 மனிதனுடைய உயர்ந்த விஷயங்கள் அவன் அருகிலேயே உள. அவன் பாதங்களின் அடியிலேயே அமையும். ஹாட்டன் பிரபு.

41 என் மானம் போய்விட்டால் நானே போய்விட்டேன்! ஷேக்ஸ்பீயர்.



---

"மானம்" என்னும் வர்க்கத்தின் ஆண் "வாய்மை"—பெண் "தூய்மை"

# மூடபக்தியின் சிறப்பு

(ஆரியூர் வ. பதுமநாப பிள்ளை)

“பக்தி வலையில் படுவான் காண்க”—என்பது மெய்யன்பர் அருள் மொழி. ‘பக்தி நம்பிக்கை ஆகிய இவற்றின் மூலம் நம்முடைய லக்ஷ்யத்தை சுலபமாக அடையலாமே யொழிய, தர்க்கம் புரிவதால் எந்நாளும் அதை அடைய முடியாது’—என்பது ஸ்ரீராமகிருஷ்ண பரஹம்ஸர் மணிமொழி. பகவத்பக்தி இல்லாத ஜன்மம் வீண் என்பதையே நற்சமயங்கள் எல்லாம் அறிவுறுத்துகின்றன. அவரவர் மனப் பக்குவ நிலைக்கேற்ப பக்தி முறைகளும் பலவகைப்பட்டனவாக இருக்கின்றன. அவற்றுள் எம்முறையைக் கைப்பற்றினும், இறைவனிடம் என்றும் குன்றாத திடநம்பிக்கை இருந்தால் மட்டுமே பயன்பெறுதல் கூடும். தர்க்க ஞானத்தில் சிறந்த விஞ்ஞானிகள்கூடப் பிரமித்து நிற்குமாறு, உறுதியான நம்பிக்கை உடைய பாமரர்களது மூட பக்தியினால், இன்றும் அருஞ்செயல்கள் பல நிகழ்ந்து வருகின்றன.

தன்னைப்பற்றிய அகங்காரம் இருக்கும்வரை, பக்தியால் பயன் எதுவும் விளையாது. வருஷங்கள் பலவாக பல சாத்திரங்களையும் பெரிதும் முயன்று மூளையில் ஏற்றிக்கொண்டும் கர்வம் நீங்கப்பெறாத பண்டிதர்கள் செய்யும் படாடோப பக்திக்கும், எழுதப் படிக்கத் தெரியாதிருந்தும் உறுதியான நம்பிக்கையுடன் கூடியவர்களாக இருந்து வருபவர்களான பாமரர்கள் செய்யும் மூடபக்திக்கும் எவ்வளவோ வேற்றுமை உண்டு.

‘வெள்ளம் பெருகிச் செல்லும் ஒரு நதியைக் கடந்து செல்லவேண்டியிருந்த மாணாக்கன் ஒருவன், செய்வகை யறியாது திகைத்துத் தனது குருவிடம் சென்று நின்று முறையிட்டான். அவரும், ‘ஆசார்யர் திருவடிகளே சரணம்’ என்று ஒரு ஓலைத்துணுக்கில் எழுதி, அதை அவனிடம் கொடுத்து ‘இதன் உதவியால் நீ வெள்ளத்தைக் கடந்து செல்வாய்’ என்று திருவாய் மலர்ந்தருளினார். அதில் உறுதியான நம்பிக்கையுடன் கூடியவனாக அம் மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே அவ்வாற்றில் நீந்திச் சென்ற அச்சீடன் விரைவில் கரையேறிச் சென்றான். அதைக் கண்டிருந்த அக்குரு, ‘நமது கால்களுக்கும் இவ்வளவு மகிமை இருக்கின்றதா’ என்று பெரிதும் வியந்தவராய், ‘என் திருவடிகளே சரணம்; என் திருவடிகளே சரணம்’—என்று கூறிக் கொண்டே ஆற்றில் இழியவும், கழுத்தளவு நீரில் சென்றவுடன் தமது விருப்பத்துக்கு எதிர்மாறாக அவ்வெள்ளப் பெருக்குக்குத் துணை செல்ல நேர்ந்தது’-

---

உலகிலுள்ள மக்களில் ஒருவன் தவிர ஏனையோர் அனைவரும் ஒரேவித அபிப்பிராயம் உடையவராயிருந்தால், அவ்வொருவனுக்குப் பலமிருந்தால் அவன் உலகத்தாரை வாயடக்க எப்படி நியாயமில்லையோ அப்படியே உலகத்தார் அவ்வொருவனை வாயடக்கவும் நியாயமில்லை.

என்று ஒரு கதை சொல்வதுண்டு. அது கற்பனைக் கதையேயாயினும், உணர்ந்துகொள்ள வேண்டிய பேருண்மையும் அதில் இல்லாமற் போய்விடவில்லை.

காலையும் மாலையும் இராமர் பட்டாபிஷேகப் படத்தின் எதிரில், 'மகா பக்தி சிரத்தையோடு சுந்தரகாண்ட பாராயண முதலிலும் முடிவிலும் தேங்காய் பழம் சுண்டல் முதலியவைகளுடன் தீபாராதனை. தாளம் மத்தளம் தம்பூர் முதலிய பக்க வாத்தியங்களுடன் பகவத் பஜனை. இவ்வித ஆடம்பரங்களுடன் 'பக்தி'யில் ஈடுபட்டிருப்போர் பலரது மனங்களில், வெளி நடிப்புக்கு எதிர்மாறான பலவகைப்பட்ட இழிந்த எண்ணங்கள். எழுதப் படிக்கத் தெரியாது. ராகத்தோடு நீட்டி நீட்டிக் கூறும் புராணப் பிரசங்கமும் நெஞ்சில் பதியாது; ராகதாளங்கள் பிசகாது பலர் தலையாட்டும்படி பாடவும் தெரியாது. அத்தகையவர்கள் சிற்சில சமயங்களில் செய்யும் மூடபக்தி, பண்டித மணிகளும் பாகவத சிரோமணிகளும் பரிகசிப்பதாகவும் இருக்கும். இருந்தாலும், அப்பாமரர்களது மூடபக்தியால் நிகழ்ந்து வரும் அற்புதச் செயல்களைக் கண்டு, சிற்சில சமயங்களில்படேபடே பாகவத சிரோமணிகளெல்லாங்கூட பெரிதும் பிரமித்து நிற்கின்றனர்.

பீமசேனன் பெருந் திண்டிக்காரன் என்றும், பகவத் பக்திக்கும் அவனுக்கும் இமய மலைக்கும் குமரி முனைக்கும் இடையிலுள்ள தூரம் என்றும் பரிகசிக்கப்படுவதுண்டு. மற்றெல்லோரையும்விட தன்னிடமே கண்ணபிரானுக்கு அதிக அன்பு என்று அர்ச்சுனனுக்கு நிரம்ப கர்வம். ஒரு சமயம் கண்ணபிரானோடு அர்ச்சுனன் கைலாயம் சென்றானாம். அக் கைலையில், வாடிய மலர்களை—நிர்மால்யங்களை—பல வண்டிகளில் ஏற்றிக் கொண்டு வந்த கிங்கரர்கள் சிலர், அவைகளைப் பல போர்களாக குவித்துக் கொண்டிருந்தார்களாம். அதுகண்டு பிரமித்துநின்ற அர்ச்சுனன், அவை எங்கிருந்து கொண்டுவரப் பட்டவை என்று அவர்களை வினவலும், அக்கிங்கரர்கள் 'யாரோ பூலோகத்தில் பீமசேனனாம். அவன் பகவானுக்கு தினந்தோறும் செய்துவரும் மானஸ பூஜையில், ஒவ்வொரு நாளும் இவ்வளவு நிர்மால்யங்கள் குவிந்துவிடுகின்றன. இவற்றைக் கொண்டுவந்து போர்களாகக் குவிப்பது எங்களுக்குப் பெரிய வேலை ஆகிவிட்டது' என்று பதிலிறுத்தனராம். அதைக் கேட்ட அர்ச்சுனன் மனம், எவ்விதம் திடுக்கிட்டிருக்கக் கூடுமென்பதைக் கூறவும் வேண்டுமோ?

தமிழ்நாட்டுக் கிராமங்களில், தற்காலத்தில் மாரியம்மன் பிரசித்திபெற்ற தெய்வம். அம்மாரியாயி கோயிலிலே, வேதபாராயணம் இல்லை; திருவிழாக் காலங்களில் பிராமண சந்தர்ப்பணை இல்லை; பக்க வாத்தியங்களுடன் நடைபெறும் தாசிக்கச்சேரியும் அங்கில்லை; செந்தலைப் புலிகளாய போலீஸ் வீரர்களின் தடபுடல்களும் அங்கில்லை. ஆனால், அவ்வம்மனுக்கு பிரார்த்தனை செலுத்தும் பாமர ஜனங்களது செயற்கருஞ் செயல்கள், மிக்க பிரமிப்பை விளைவிப்பனவாக இருக்கின்றன. நமது உடலில் ஒரு சிறு ஊசி குத்திவிட்டால், 'ஐயோ! அப்பா! வலிக்கிறதே!' என்று கத்துகிறோம். மாரியம்மன்

---

நூல்களைப் பற்றிய "சுவையறிதல்" என்றால் என்ன? நூல்களின் குணங்களைச் சந்தோஷத்தோடும் குற்றங்களை வருத்தத்தோடும் காணும் மனப் பான்மையே சுவையறிதல் ஆகும்.

கோயிலிலோ, அவ்வம்மனுக்கு பிரார்த்தனை செய்துகொண்ட பலர், தத்தமது மார்பிலும் வயிற்றிலும் கைகளிலும் சிறு சிறு ஊசிகள் பலவற்றை குத்திக் கொண்டு, அவ்வூசி முனையில் எலுமிச்சம்பழம் ஒன்றையும் செருகிக் கொள்கின்றனர். அவ்வளவோடு அமையாது முதுகின் நடுவில் இரு சிறு கொக்கிகளைக் குத்திக் கொண்டு அவற்றில் கட்டப்பட்டுள்ள கயிறுகளால் அழகிய சிறு பூந்தேர் ஒன்றையும் இழுத்துக் கொண்டு தெருத் தெருவாகச் சுற்றி வருகின்றனர். அதனால், அவர்களது உடல்களுக்கு எவ்வித பாதகமும் ஏற்படுவதில்லையாம். என்னகோரமான காட்சி இது! பெரிய பெரிய பட்டினங்களிலே, அழகிய கட்டிடங்களிலே ஏவலாட்கள் பலர் பணிகேட்டு நிற்க மெத்தை தைத்த சோபாக்களிலே அமர்ந்து மின்சார வீசிறிக் காற்று வாங்கிக்கொண்டு 'குஷாலாய்' பொழுது கழிக்கும் நவீன நாகரிக ஷோக்காளிகள், மேற்குறிப்பிட்ட பிரார்த்தனைக்காரர்களது அற்புதச் செய்கைகளைச் சிறிது சிந்தித்துப் பார்ப்பார்களா? அப்பிரார்த்தனைக்காரர்கள் ஜால வித்தைகளில் தேர்ந்தவர்கள் என்று சொல்லிவிடத் துணிவு கொள்வார்களா? வேதாந்த சித்தாந்த தத்துவ புராண விசாரம் சிறிதளவும் செய்தறியாத பாமர ஜனங்கள், தெய்வத்தின் பெயரால் அத்தகைய அற்புதச் செயல்களைச் செய்து வருவது எதனால்? கள்ளம் கபடறியாத—மனமார்ந்த—உறுதியான—தீவிர நன்னம்பிக்கையினாலேயே அல்லவா? ஆகவே, அன்பர்கான்! இன்று நமக்கு வேண்டுவது என்ன? நம்பிக்கை! நம்பிக்கை!! நம்பிக்கை!!!



தமிழகத்தில் 'வேடுவர்' என்பதொரு சாதியினர் இருக்கின்றனர். அவர்களது பேச்சும் வாழ்வும் மற்றவர்களால் பரிகசிக்கக்கூடியனவாக இருக்கும். அவர்கள் வழிபடுவது 'கன்னிமார்' என்னும் தேவதைகள். இரவுகளில், அவர்கள் கூட்டமாகக் கூடி உட்கார்ந்து கொண்டு பாட்டுகள் பல பாடிக்கொண்டு அவர்களது இஷ்ட தேவதைகளைக் குறித்து தோத்திரம் செய்து கொண்டிருப்பது விநோதமானதொரு காட்சியாகும். சில சமயங்களில் அவர்கள் விசேஷ பூஜைகள் செய்வதுண்டு; அப்பொழுது அவர்களில் ஒருவன்மீது ஆவேசம் வந்துவிடும். அவ்வாவேசக்காரன் குதித்தெழுந்து தலையைச் சுற்றிக் கொண்டே,

"வைக்கிறேன் வைக்கிறேன் இன்னிங்களே! வைக்காத பூட்டிங்களே!
கொத்தோடே வாயப்பயம் கொண்டு படைக்கிறேன் இன்னிங்களே!

என்று பாடிக்கொண்டே மற்றவர்களை அதட்டுவான். அவர்கள் பெரிதும்

---

நம்பக்கம் உண்மையிருப்பது வேறு—நாம் உண்மையின்பக்கத்திலிருக்க விரும்புவது வேறு.

அஞ்சியவர்களாய் 'ஆத்தே கன்னியம்மா அல்லாத்தையும் பொறுத்துக்கணும்' —என்று வேண்டிக்கொண்டு, அக் கன்னியம்மையின் சிலையை அலங்கரித்து எடுத்துக்கொண்டு ஊர்கோலமாகக் கொண்டுவரத் தொடங்குவர். அவ்வாவே சக்காரன் சாமியின் முன்னே ஆடிக்கொண்டே வருவான்; வீடுதோறும் அச் சாமி நின்றுகொண்டே வரும். ஒவ்வொரு வீட்டின் முன்னும் ஆடிக் கொண்டே வரும் அவ்வாவேசக்காரன், தனது வலக்கையை உயரத் தூக்கிக் காட்டுவான். அருகிலிருக்கும் ஒருவன் தனது கையில் பிடித்திருக்கும் சணற் கயிற்றினால் உறுதியாகப் பின்னப்பட்ட நீண்ட சாட்டையினால் பளார் பளார் என அவனது கையில் ஓங்கி அடிப்பான்; சில சமயங்களில் அக்கையில் இரத் தம் பீரிட்டு ஒழுகுவதும் உண்டு. ஆயினும், அவ்வாவேசக்காரன் அதனால் சிறிதும் சலிப்படைவதில்லை. நவீன நாகரிகச் செல்வச் சீமான்களே! இவ் வற்புதத்தைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கின்றீர்கள்.

பாண்டவர் தேவியாகிய பாஞ்சாலி அம்மையார், தற்காலத் தமிழ்நாட் டில் பலருக்குக் குலதெய்வமாக இலங்குகின்றாள். அத் திரௌபதி அம்மன் திருவிழாக்களிலே 'நெருப்பு மிதிக்கும் திருவிழா' மிக்க வியப்பை விளைவிப்ப தாகும். அத் திருவிழாவில் நெருப்பு மிதிப்பதாக அம்மனுக்கு பிரார்த்தனை செய்துகொண்ட ஆடவர்கள், குறிப்பிட்ட தினத்தன்று நீராடி, சேலை ரவிக்கை நகைகள் முதலிய அணிந்து பெண்வேடம் பூண்டு ஆலயத்தை அடைவர். சுமார் பத்தடி நீளம் பரப்பப் பட்டு கொளுத்தப்பட்ட விற குக் கட்டைகள் 'தக தக' வென்று தணலாகி ஜ்வலித் துக் கொண்டிருக்கும். அப் பிரார்த்தனைக்காரர்கள் திரௌ பதி அம்மனைத் துதித்துக் கொண்டே, சாதாரண தரை மீது நடந்து செல்வதேபோல் அத்தணல்மீது நடந்து செல் வர். அதனால் அவர்களது கால்கள் சற்றும் கொப்புளங் கொள்வதுமில்லை. தீயில் தோன்றிய திரௌபதி அம் மனை வழிபடும் அன்பர்கட்கு, இன்றும் அத் தீ குளிர்ந்திருக் கின்றது போலும்! ஆடவர்



களே யன்றி சின்னஞ் சிறுவர்களும்கூட அவ்வாறு அந் நெருப்பின்மேல் நடந்து செல்வதுண்டு. நமது விரலில் சிறிதளவு நெருப்புச் சுட்டுவிட்டாலும், உடனே கொப்புளம் உண்டாகி பெரிதும் வருந்துகின்றோம் அல்லவா? பத்துப் பன்னிரண்டடி நீளம் பரப்பப்பட்ட நெருப்பின்மேலே அவர்கள் அவ்வளவு உற்சாகத்துடன் நடந்து செல்வது எவ்வாறு சாத்தியமாகின்றது? அவர்கள்

---

தவறான அபிப்பிராயத்தை ஒழிப்பதும், அறிவைத் தூய்மை செய்வ தும், நமது அறியாமையின் ஆழத்தை உறுதி செய்வதுமே தத்துவ ஞானத் தின் தொழில்.

அம்மனின் சக்தியில் கொண்டுள்ள தளரா நம்பிக்கையினாலேயே அல்லவா அவ்வரிய செயலும் எளிதாகின்றது! ஆகவே, அன்பர்காள் பக்திநெறியில் வெற்றிபெற வேண்டுமாயின், நமக்கு வேண்டுவது என்ன? நம்பிக்கை! நம்பிக்கை!! நம்பிக்கை!!!

செந்தமிழ் நாட்டின் வட எல்லையாகிய திருப்பதி ஸ்ரீநிவாஸப்பெருமான் சந்நிதியிலேயே, இடைவிடாமல் 'கோவிந்தா! கோவிந்தா!!' என்று கோஷித்துக் கொண்டும், பிரகாரங்களில் தேங்கி நிற்கும் சேற்றையும் ஜலத்தையும் தூசுகளையும் பொருட்படுத்தாது தரையில் படுத்துக்கொண்டு உருண்டு உருண்டு சென்றவாறு 'அங்கப்ரதட்சிணம்' செய்துகொண்டும், பெருமான் சேவையை முன்னிட்டுக் கோயிற் சேவகர்கள் தமது முதுகின்மேல் அடிக்கும் தோல்பட்டை அடிகள் பலவற்றையும் பொறுமையுடன் சீரிய சத்தியாக்கிரகிகளே போல் சகித்துக்கொண்டும் வரும் பாமர ஜனங்களது மூட பக்திக்கும், எந்த இடத்தில் ததீயாராதனை நடக்கின்றதோ என்று இராமாநுஜ கூடங்கள் தோறும் தேடித்திரிந்து வாடிவருந்தும் பட்டைத் திருமண் பன்னிரண்டும் அணிந்த பாகவத சிரோமணிகளுடையவும் 'பந்திக்கு முந்திக்கொள்; படைக்கு பிந்திக்கொள்' என்றதற் கிணங்க சந்தர்ப்பணை நடக்கும் இடங்களில் இரண்டு மணி நேரத்திற்கு முன்பாகவே எழுந்தருளியிருந்து உதர நாராயணனுக்கு வஞ்சனை செய்யாது கொண்ட மட்டும் 'அம்சை பண்ணியருளி' உண்ட களைப்புத் தீரக் கும்பலாக உட்கார்ந்து 'தாம்பூல பஞ்சாதி' ஓதும் ஸ்வாமிகளுடையவும் 'சாஸ்த்ரோக்த' பக்திகளும் எவ்வளவு வித்தியாசம்! வடகது மலையானுக்கு மகிழ்வூட்டக் கூடியது பாமரர்களது கபடற்ற மூடபக்தியா? பாகவதர்களுடையவும் ஸ்வாமிகளுடையவும படாடோப பகதியா? தம்மைப்பற்றிய காவலும் உள்ளொன்று வைத்துப் புறம்பொன்றுபேசும கள்ள மனமும் நீங்காதவரை, எவ்வளவு பகதியாக நடிப்பினும் என்ன பயன்? படித்த அறிஞர்களின் கர்வம் அகலாத பக்தியைவிட, படியாத பாமரர்களின் கர்வம் அறியாத பக்தி எவ்வளவோ சிறந்த தல்லவா? இது பற்றியே போலும் தாயுமானவருர், "கல்லாத பேர்களே நல்லவர்கள் நலலவர்கள்; கற்றும் அறிவில்லாத என்—கன்மத்தை என் சொல்கேன்?"—என்று அருளிச் சென்றார்.



மேலும், மூடபக்தி உடையவர்களைத் திருத்துவது மிக்க எளிது. ஆனால், வித்யாகர்வ முடைய படாடோப பக்தர்களைத் திருத்துவது மிக்க கடினம். உள்ள உண்மைகளை எடுத்து விளக்கிக் காட்டினால், அவை கர்வமற்ற பாம

---

பேரெண்ணங்கள் எல்லாம் வெகு எளியன. அதுபோலவே பெரியோர்களும் எளியர்.

ரர்களது மனதில் படிவதுபோல் கர்வம் மிக்க ஆடம்பர பக்தர்களது அகத்தில் எளிதில் படிவதில்லை. "ஆணியானது கல்லுக்குள்ளே நுழையாது; மண்ணுக்குள்ளே சுலபமாக நுழையும். அதுபோல, மகான்களின் போதனைகள் பிரபஞ்சத்திலே தடித்துக் கடினமாக இருக்கின்ற மனத்துக்குள்ளே நுழையாது; விசுவாசமும் நம்பிக்கையும் நிறைந்த இருதயத்துள் சுலபமாக நுழைந்து விடும்"—என்னும் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸரது அருள்மொழிகள் ஈண்டு கவனிக்கத் தக்கன.

கோழிகள் ஆடுகள் முதலிய ஏழைப்பிராணிகள் அநியாயமாகப் பலியிடப்பட்டு வரும் கொடுமை மட்டும் நீங்கிவிட்டால், மாரியம்மன் திரௌபதியம்மன் முதலிய தேவதைகளின் கோயில்கள் எவ்வளவோ சிலாகிக்கத் தகுந்தனவாகும். மாமிசத்தில் நாம் கொண்டுள்ள பேராசையை தெய்வத்தின் மீது ஏற்றி, 'பலி கொடுக்காவிட்டால் சாமிக்குக்கோபம் மிகுந்து பலவித துன்பங்களை உண்டாக்கிப் பெரிதும் வாட்டிவிடும்' என்று பாமரர்களைப் பயப்படுத்தி, எண்ணிறந்த ஏழைப்பிராணிகளை கொல்வித்து வரும் படுபாவிகளான பூசாரிகளின் மிருகத்தன்மை வாய்ந்த இழிசெயல்களால், கபடமற்ற மூடபக்தியின் பெருமைக்குப் பேரிழுக்கு உண்டாகின்றது. அதன் பயனாக, சீவகாருண்ய சீலர்களான உண்மை அன்பர்கள், அக்கோயில்களைக் காணுந்தோறும், 'கலியுறு தெய்வச் சிறிய வெங்கோயில் கண்டகாலத்திலும் பயந்தேன்'—என்ற வள்ளலார் அருளியவாறு அஞ்சி அகன்று விடுகின்றனர்.

செந்தமிழ்நாட்டுப் பக்தர்களே! எளிய மக்களை எள்ளி நகையாடும் இயல்பினரே! கற்றும் கர்வம் அகலாத கண்ணியவான்களே! கர்வமற்ற-கபடமற்ற-மனமார்ந்த-உண்மை யன்புடைய-தீவிர நம்பிக்கையுடைய-மூடபக்தியின் பெருமையை உணராது அதைப் பரிகசியாதீர்கள்! மனமார்ந்த—உறுதியான நன்னம்பிக்கையினால் செயற்கரும் செயல்களும் எளிதில் நிறைவேறுதல் கூடும்' என்பதை உணருங்கள்! 'மூடபக்தி'க்குப் பேரிழுக்கை உண்டாக்கும் உயிர்ப்பலியிடும் கொடிய பழக்கத்தைத் தமிழ்நாட்டினின்றும் விரைவில் விலக்க முயலும் பணியில் தீவிரமாகத் தலைப்பட்டு உழைக்க முன் வாருங்கள். உள்ளம் தூய்மையாகவும் கர்வமற்றதாகவும் இருப்பின், இறைவனது இன்னருள் எய்தப் பெறுவது உறுதியாகும். திருவருள் முன்னிற்க.!

# லைப் இன்ஷியூரென்ஸ் பகுதி

(இன்ஷியூரென்ஸ்.)

## ஒரு தனவந்தன் கதை

உலகில் ஒருமனிதன் பரம ஏழையாயும் இன்னொருவன் பிரபுவாகவும் இருப்பது எவ்வளவு அநியாயமாகத் தோன்றுகிறது? கடவுள் மனிதரிடம் கிருபையுள்ளவரா யிருப்பின் இவ்வாறு மக்களில் வித்தியாசங்களை யுண்டுபண்ணி யிருப்பாராவென்று சிலர் கேட்கிறார்கள். சிலர், "உலகத்தில் உள்ள இயற்கைப் பொருள்களைக் கவனியுங்கள். அவற்றில் சில மலைகளும் சில பள்ளங்களாகவு மிருக்கின்றனவே, அதுபோல் மனிதரிலும் இவ்வித்தியாசங்கள் இருத்தல் அவசியமென"ச் சொல்லுகின்றனர். சிலர் "என்ன செய்யலாம்? அவரவருடைய கர்மாவின் பலனாக ஒவ்வொன்றும் உண்டாகிறது. நாம் அக்கர்மாவை எதிர்த்து நின்று போர்செய்வ தசாத்திய"மெனச் சொல்லுகின்றனர். அஃதெவ்வாறாயினும் ஆகுக. வெகுவாக நாம் காணுவது பிணியும் ஆரோக்கியமும், வறுமையும் செல்வமும், தாழ்மையும் மேன்மையும் அருகாமையில் குடிகொண் டிருப்பதுதான்.

சில நாட்களுக்கு முன்பு, ஒருநாள் சாயங்காலம் கடற்கரையில் உலாவிக் கொண்டிருந்தேன். சென்னைக் கடற்கரையை உலகத்திலேயே இரமணீயத்தில் இரண்டாவதாகச் சொல்லுகிறார்கள். சாயங்காலவேளையும், ஜோதிமயமாய் விளங்கும் பெரிய மின்சார விளக்குகளின் வரிசையும், வித விதமான மோட்டார்வண்டிகளும், பல விதமான ஆடையாபரண பூஷிதராய் விளங்கும் மனிதர்களும், இதமாய்க் காதில்விழும் கடலோசையும், கண்ணுக் கெட்டிய தூரம் வரையில் நீலவர்ணமுள்ள தண்ணீரும் எவருடைய மனத்தையும் கரைக்கும் என்பதில் சந்தேகமில்லை. இப்படிப்பட்ட திவ்ய உலகத்தில் இருக்க மனிதன் என்ன புண்ணியம் செய்தானோ? ஆனால் அடுத்த வீதியிலுள்ள, அசுத்தமும், நாற்றமும், பிணியும், வறுமையும் அறவே ஒழிந்து இம்மாதிரி இரமணியமே எங்கும் நிறைந்திருப்பின் நின்னை மனிதன் மதியாது கர்வமடைவானெனக் கருதினையோ?" என இவ்விதம் யோசித்துக்கொண்டே

---

ஆணுக்குள்ளதைவிடப் பெண்ணுக்கு இயற்கை யறிவின் ஆற்றல் நிச்சயமாய் அதிகம். சாதாரண அறிவு சக்தியில் பெண் ஆணுக்குத் தாழ்ந்தவளே. ஆனால் உணர்ச்சிகளின் தூய்மையிலும் உயர்விலும் ஆணைவிடப் பெண் பன்மடங்கு உயர்ந்தவளாவள். பெண்ணின் ஆக்கை ஆன்ம இயல்பு ஆணுக்கு இல்லாததை அளிக்கத்தக்க முறையில் அழகாய் அமைந்துளது. ஆணின் சக்திகளை அவள் தூய்மைசெய்து உயர்த்தாவிடில் அவை இழிந்த சுயநல இலட்சியங்களுக்கே உபயோகிக்கப்பெறும்.

போய்க்கொண் டிருக்கும்போது "ஒரு பிரபுவின் நூதனமான மோட்டார் வண்டி வந்து நின்றது. அதிலிருந்து அப்பிரபு இறங்கிக் கடற்கரைக்கு மெதுவாக நடந்து சென்றார். போகும்போது ஆங்கிருந்த ஓராசனத்திலிருந்த சாதாரண மனிதனொருவன் என்னை விளித்து, "சில மனிதருக்கு எவ்வளவு அதிர்ஷ்டம் பாரும்! இதோ போகிறானே இம்மனிதனுக்கு என்ன மதிப்பு! என்ன அந்தஸ்து! என்ன செல்வாக்கு! அவனுக்கு மாத்திரம் இப்படியிருப்பானேன்? நாமெல்லோரும் இப்படிக் காலால் நடந்து ஓடியாடிக் கஷ்டப்பட்டுத் திரிந்து கொண்டிருப்பானேன்" என்றான். நான் பதில் சொல்வதற்குள் அப்பிரபு "அன்பர்களே! என்னை மன்னிக்கவேண்டும். தாங்கள் பேசிக்கொண்ட விஷயம் என்னை யறியாமல் காதில் விழுந்தது. அதற்குச் சமாதானம் சொல்ல எண்ணங் கொண்டிருக்கிறேன். தயவு செய்து என்னுடன் கடலோரத்திற்கு வருவீராயின் நன்றியுள்ளவனா யிருப்பேன்" என்றார். இதைக்கேட்டு நானும் என்னுடன் பேசிய மனிதனும் திடுக்கிட்டோம். எனினும் அவருடன் போவதற்குத் தயாராய் இருந்தோம். கடலோரஞ் சென்று ஏகாந்தமாய் உட்கார்ந்த பிறகு, பிரபு, அம்மூன்றாம் மனிதனைப்பார்த்து "அன்பனே, உன்மீது எனக்குச் சற்றும் கோபமில்லை. நீ கொண்டிருப்பது தப்பபிப்பிராய மென்றே காட்ட முன் வந்தேன். எனக்கும் ஏழைமைத்தனமென்ப தென்னவென்று தெரியும். என் தகப்பனாரும் ஏழைதான். இப்போதும் எனக்குப் பண மிருந்தும் நான் ஏழைகள் மத்தியிலேயே காலத்தைக்கழித்து அவர்கள் துன்பத்தைத் தீர்க்கவே முயல்கின்றேன். நான் இந்த நிலைமைக்கு வந்ததன் காரணம் என் தகப்பனாரின் முன் யோசனையே. அவர் ஏழையாயிருப்பினும், நான் பிறந்தவுடன் எனக்கு நல்லகல்வி கற்பித்து என்னை யாவது செல்வவந்தனாகப் பார்க்க வேண்டுமென்பது அவருடைய கோரிக்கை. ஆயினும் அவருடைய மாதச் சம்பளம் 35-ரூபாய்தான். இதில் என்னதொகை சேர்க்க முடியும்? மயிரைச் சுட்டுக் கரியாக்க முடியுமா வென்று ஏங்கி நின்றார். அப்போது அவருடைய நண்பர் ஒருவர் சீக்கிரத்தில் ஒரு நிதியை யேற்படுத்தும் வழியைக் காண்பிப்பதாகச் சொல்லி அவரை இன்ஷியூர் செய்யச் சொன்னார். அதாவது மூன்று மாதங்களுக்கு ஒருமுறை பத்துரூபாய் கட்டிக்கொண்டு வந்தால் இருபது வருஷங்களுக் கிறுதியில் ஆயிரம் ரூபாய் கொண்ட நிதியொன்று உண்டாகும். மத்தியில் மரணம் எப்போது நேர்ந்தாலும் நிதிகுறையாமல் கிடைக்குமென்றும் சொன்னார். என் தாயாருக்கு இது இஷ்டமில்லை. இம்முறையில் பணம் சேர்க்க வேண்டாமென்றும், பிள்ளை எப்படியாவது பிழைத்துப் போவான், கடவுள் அதற்கென்று அவனுக்கு வழியேற்படுத்தி யிருப்பார் என்றும் சொன்னாள். என் அதிர்ஷ்ட வசத்தால் என் தகப்பனார் அவளுடைய வார்த்தையைக் கேட்காமல் இன்ஷியூர் செய்து கொண்டார். இரண்டு வருஷங்கள் கழிந்தன. திடீரென்று என் தகப்பனாருக்குக் காய்ச்சல் உண்டாகிக் காலமாய் விட்டார். இன்ஷியூரென்ஸ் கம்பெனியார் என்னுடைய தாயாரிடத்தில் ஆயிரம் ரூபாய்களைக் கொடுத்தார்கள். என் தகப்பனார் கட்டினதொகை எண்பது ரூபாய்.

---

திருப்தியுள்ள பன்றியாயிருப்பதினும் திருப்தியில்லா மனிதனாயிருப்பது நலம். திருப்தியுள்ள மூடனாயிருப்பதினும் திருப்தியில்லா ஞானியா யிருப்பது நலம். பன்றியும் மூடனும் இவ்வபிப்பிராயத்திற்கு மாறுபட்டால், அதற்குக் காரணம் அவர்களுக்கு விஷயத்தில் தங்கள் பட்சமே தெரியும். ஒப்பிட்டறிலுள்ள பிறரே இருபட்சமும் அறிவர்.

தான். எங்களுக்குக் கிடைத்ததொகை 1000-ரூபாய். என் தாயார் புத்திசாலித் தனமாய் இத்தொகையைக் கட்டிவைத்து அதிலிருந்து வரும் வட்டியைக் கொண்டு எப்படியோ எனக்கொரு குறைவுமில்லாமல் வளர்த்து விட்டாள். எனக்குக் கல்வியும் சம்பூர்ணமாய்க் கொடுத்தாள். எனக்கு வியாபாரத்தில் புக இஷ்டமாயிருந்தது. ஒரு சிநேகிதர் "ஆயிரம் ரூபாய் முதலிருந்தால் உன்னைக்கூட்டு வியாபாரத்திற்கு எடுத்துக் கொள்கிறேன்" என்றார். அந்த நிதியை அப்படியே அவரிடம் கொடுக்க வியாபாரம் செம்மையாய் நடந்து நல்ல லாபம் கிடைத்தது. அவருடைய அனுமதியின் பேரில் நான் தனியாக வியாபாரம் நடத்தலானேன். இது வரையில் குறைவில்லாமலே நடந்து வந்திருக்கிறது. அன்பனே! அதிருஷ்டம் என்பது சரியான பதமல்ல. முன் ஜாக்கிரதை யிருந்தால் அதிருஷ்டமும் கூடவே உண்டாகும். என் தகப்பனார் என்தாயின் பேச்சைக் கேட்காததற்கு இப்போது என்தாய் தெய்வத்தைப் போற்றுகின்றாள். இன்ஷியூரென்ஸ் கம்பெனியையும் வெகுவாகப் புகழ்வதல்லாமல் என்னையும் இன்ஷியூர் செய்துகொள்ள அனுமதி கொடுத்தாள். நான் லக்ஷ ரூபாய்க்கு இன்ஷியூர் செய்திருக்கிறேன். 'ஏன், உமக்குத்தான் ஐசுவரிய மிருக்கிறதே' என்பீரோ? என்னுடைய வியாபாரத்திற்கு நான்தான் மூலதனம். நான் மரித்து விட்டால் வியாபாரம் நிலைகுலைந்து விடும். ஆகையால் வியாபாரத்திற்கு ஆதரவா யிருக்கட்டும் என்றே இன்ஷியூர் செய்திருக்கிறேன். என் தகப்பனார் இல்லை யென்ற ஒரு வருத்தமேதவிர, அவருடைய புத்திசாலித்தனத்தால்தான் நமக்கு இவ்வளவு அந்தஸ்து என்று எனக்குப் புலப்படுகிறது. அவரிருந்தால் எனக்கு கல்வி சம்பூர்ணமாய்க் கொடுத்திருப்பார். அவருக்குப் பிரதியாக இந்தநிதி இப்போது கொடுத்திருக்கிறது. இந்த நிதியே அவர்—அவரே இந்தநிதி. மனிதரின் புகைப்படம் போன்றது இந்த இன்ஷியூரென்ஸ் நிதி. நான் இப்போது யாரைப்பார்த்தாலும் அவர்களுக்கு இன்ஷியூர் செய்யும்படி புத்தி கூறிக்கொண்டு வருகிறேன். எனக்குப் பிரத்தியக்ஷமாக நன்மையெனத் தெரிந்ததைப் பிறரறியச் சொல்லாதிருப்பின் எவ்வளவு பாவத்திற் குள்ளாவேன்? என்னுடைய குமஸ்தாக்களைக் கட்டாயப்படுத்தி இன்ஷியூர் செய்யச் சொல்லி யிருக்கிறேன். என்னுடைய சபையிலுள்ளோரையும் வற்புறுத்தி இன்ஷியூர் செய்யச் சொன்னேன். இனிமேல் கிராமப்பிரசாரஞ் செய்வதாக உத்தேசித்திருக்கிறேன். தற்காலம் அவகாசமில்லை. ஆயினும் கூடிய சீக்கிரத்தில் அதற்காக வேண்டிய ஏற்பாடுகள் செய்து முடிக்கலாமென்று நினைக்கிறேன். நேசனே! இப்போது தெரிந்ததா; எனக்குக் கண்ணை மூடிக்கொண்டு ஐசுவரியம் வந்துவிடவில்லை. நானும் அவஸ்தைகள் பட்டிருக்கிறேன். நான் மேன்மை யடைந்ததன் காரணம் என்னுடைய தகப்பனாரின் முன் ஜாக்கிரதையாற்றான் என இன்னொருமுறையும் சொல்லுகிறேன். இப்படிக் குடும்பங்களுக்கு ஆதரவு தேடிக்கொடுக்கும் முறையொன்று நமது உலகத்தில் வழங்குகிறதைக் குறித்துச் சர்வவல்லமையுள்ள கடவுளுக்கு நாம் நன்றியுள்ளவர்களா யிருக்கவேண்டும்" என்று சொல்லி

---

தன் அபிப்பிராயங்களில் எதையும் ஒருபொழுதும் மாற்றிக்கொள்ளாதவன் தன் தவறுகளில் எதையும் ஒருபொழுதும் திருத்திக்கொண்டவனல்லன். தன்னிடம் குற்றம் எதுவும் காணப்போதிய அறிவில்லாதவனுக்குப் பிறரிடமும் குற்றம் என்று அவன் கருதும் எதையும் மன்னிக்கப்போதிய தயாளகுணம் இருக்காது.

முடித்தார். நாங்கள் இருவரும் அவரிடம் செலவு பெற்றுக்கொண்டு திரும்பினோம்.

முனிசீப் வேதநாயகம் பிள்ளையவர்கள் இயற்றியுள்ள பிரதாப முதலியார் சரித்திரத்தில் ஒரு வேடிக்கையான விஷயம் கூறியிருக்கிறார். பிரதாபன் சிறுவனாயிருந்தபோது ஒருநாள் ராம நாடகம் ஆடிக்கொண் டிருந்தார்கள். பிரதாபனும் அவனுடைய தோழர்களும் விளையாடிவிட்டு நாடகம் பார்க்கச் சென்றனர். அப்போது கைகேயிக்குத் தசரதன் கொடுத்த வாக்கை நிறைவேற்ற ராமன் காட்டுக்குப்போகும் சந்தர்ப்பம். தசரதர் ஒருபுறம் புலம்புகிறார். ராமன் காட்டுக்குத்தான் போவேன் என்று சொல்லுகிறார். அச்சமயம் பிரதாபனும் அவனுடைய தோழர்களும் பாணத் தடிகளுடன் நாடக மேடைமேல் ஏறி, ராமனைப் பார்த்து "தகப்பனார் புலம்புகிறார். நீ என்ன பிடிவாதஞ் செய்கிறாய்" என்றார்கள். "பிதுர்வாக்கிய பரிபாலனம்" என்றான் ராம வேஷக்காரன். அதெல்லாம் கூடாது. காட்டிற்குப் போகக் கூடாது. போனால் காலை முறித்து விடுவோம் என்று பாணத் தடிகளைக் காட்ட, ராம வேஷக்காரன் தண்டப் பிரயோகத்திற்குமுன் பிதுர்வசனம் எம் மாத்திரமென்று பட்டாபிஷேகஞ் செய்துகொள்ளச் சம்மதிக்கச் சிறுவர்கள் தசரதரை எழுப்பி பட்டாபிஷேகஞ் செய்யச் சொன்னார்கள். இப்படியாக ராமாயணத்தைச் சுருக்கமாக முடித்துவிட்டார்கள் என எழுதியுள்ளார். இக்கதை வேடிக்கைக்கு எழுதப்பட் டிருப்பினும், நமது புராணங்களில் கூறிய விஷயங்கள் வேறுவிதமாக முடிந்திருக்கலாகாதா வென்று யோசிப்பது தவறாகாது என்று நினைக்கிறேன். உதாரணமாக அக் காலத்தி லெல்லாம் இன்ஷியூரென்ஸ் வழங்கி வந்ததென வைத்துக்கொள்வோம். அரிச்சந்திரன் சக்கரவர்த்தியா யிருந்தும் நாடெல்லாம் இழந்து தன்னையும் மனைவியையும் புத்திரனையும் விற்கவேண்டி வந்தது. இன்ஷியூரென்ஸ் முறை வழங்கி இருந்தால் இத்துன்ப மிருந்திராது. ராஜாவாக விருப்பவன் விசேஷ தொகைக்கு இன்ஷியூர் செய்திருக்கக்கூடும். அமெரிக்காவில் கோடீஸ்வரர்களும் லக்ஷக்கணக்காக இன்ஷியூர் செய்துகொண்டு வருகிறார்கள். அம்மாதிரி அரிச்சந்திரனும் செய்திருந்தால் விசுவாமித்திரரின் கடனைக் கொடுத்துவிட அது உதவி யிருக்குமல்லவா? இன்ஷியூரென்ஸ் ஆபத்திற் குதவும் சிநேகிதன். கடன் வாங்கியிருக்கலாம். அல்லது இன்ஷியூரன்ஸ் பத்திரத்தை ஈடுவைத்து பணம் தயார் செய்திருககலாம். அப்போது அரிச்சந்திரன் சரித்திரமே வேறு மாதிரியாக முடிந்திருக்கும்.

பாரதமும் அப்படியே. பஞ்ச பாண்டவர்களுக்கு இன்ஷியூரென்ஸ் பத்திரமொன் றிருந்திருப்பின், அவர்கள் கதியில்லாமல் காட்டிற்குப் போயிருந்திருக்கவேண்டாம். எல்லாவற்றையும் தோற்ற பிறகும், இப்பாலிஸியை தோற்றுவிட் டிருக்கமுடியாது. இப் பத்திரத்தை கடன்காரர் பறித்துப் போகமுடியாது. சூதாட்டத்தில் அடமானமாக வைக்கமுடியாது. மனைவிக்கு என்று எழுதிவிட்டால் அன்னியருக்கு அது பிரயோஜனப்படாது.

---

"அறியாமை"யால் நமக்குச் சௌகரியங்கள் கிடையாமல் போகும் என்பது மட்டுமன்று—நமது கேட்டிற்கு நம்மையே வேலைசெய்யத் தூண்டுவதும் அதுவே. அது அறிவிலா "இன்மை" என்பது மட்டும் அன்று—சதாகாலமும் துன்பம் தந்துகொண்டிருக்கும் தவறுகளின் "நிறைவு"ம் ஆகும்.

நளச் சக்ரவர்த்தியும் நாடுநகரங்களை இழந்து திரியவேண்டி யிருந்திருக்காது. அரசனாயினும் ஏழையாயினும், தனக்கு எட்டாத இடத்தில் பொருள் வைத்திருப்பது அவசியம். மற்றவை யெல்லாம் போய்விட்டாலும் அப் பொருளாவது கண்டிப்பாய் நிற்கும். அப் பொருளை வைத்துக்கொண்டு முன்போல் அவ்வளவு அந்தஸ்தாய் வசிக்காவிட்டாலும், கூடியமட்டில் ஒருவர் கையை யெதிர் பார்க்காமல் காலக்ஷேபம் செய்யலாம். இந்திய அரசர்களில் ஒருவராகிய நாசிருடீன் என்பவர், தம்முனுடைய சொந்தச் செலவிற்குச் சமஸ்தானத்திலிருந்து ஒரு காசும் எடுப்பதில்லையாம். ஒழிந்த நேரத்தில் குல்லாய்கள் தைத்து விற்று ஜீவித்திருந்தாராம். அதாவது இவர் ராஜ்யத்தை எந்தக் காரணத்திலாவது இழக்க நேரிட்டாலும் இவருக்கு குடும்ப சம்ரக்ஷணம் கஷ்டமாயிருந்திருக்காது. இவர் வரையில் குல்லாய்த் தொழில் இன்ஷியூரென்ஸைப்போலிருந்தது. ஒவ்வோ ரரசனும் ஒவ்வொரு தொழிலில் பயிற்சி பெற்றே இருந்ததாகப் படிக்கிறோம். ஏன்? செல்வம் சகடக்காலல்லவா? சகடம் திரும்பும்போது தன்னுடைய நிலைமை எவ்வாறிருக்குமென யாரறிவார்? எதற்கும் தயாராய் இருக்கவேண்டுமென அவர்கள் அறிந்திருந்தனர். இவ்வறிவே அவர்கள்மட்டில் இன்ஷியூரென்ஸ் போன்றது.

இன்னொரு விஷயம்: முன்காலத்தில் அரசர்கள் அநாதை ரக்ஷகர்களாயிருந்தனர். அரசனிடம் விண்ணப்பஞ் செய்துகொண்ட எவரும் பணமில்லாமல் திரும்பி வரவில்லை. அநாதைக் குடும்பங்களை அவ்வளவு பாதுகாத்துவந்தனர். இன்ஷியூரென்ஸ் என்பது அநாதைக் குடும்பங்களுக்கு உதவிபுரியும் முறையன்றோ! அரசர்கள் ஏழைகளைப் பராமரித்தார்களெனில் அவர்களுக்கு இன்ஷியூரென்ஸைப் போலிருந்தார்களென்றே பொருள். இக் காலத்தில் சமஸ்தானத்தில் இவ்வித ஏற்பாடுகள் செய்வதுமுடியாது. அரசாட்சியைவிடக் குடியாட்சி செலவு அதிகம். நாட்டின் வருமானமும் குறைவு. உலகத்தின் ஜனத்தொகையும் பெருகிவிட்டது. ஆங்கிலத்தில் உள்ள பழமொழிப்படி அவனவன் அவனவனுக்குப் பார்த்துக்கொள்ள வேண்டியதுதான். ராஜ்யம் கைவிட்டபின் ஜனங்களே தமக்குள் ஏதேனும் வழியுண்டாக்கிக்கொள்ள வேண்டியது அவசியம். இன்ஷியூரென்ஸ் என்பது பொதுஜனங்கள் கூடி ஒருவர்க் கொருவர் ஆபத்துக்காலத்தில் உதவி செய்யும்முறை. குறித்த காலத்திற் கொருமுறை ஒவ்வொருவரும் இவ்வளவென்று தொகை செலுத்துகிறார்கள். இத்தொகையை நிர்வகித்து, சந்தாதார்களில் எவருக்காவது விபத்து நேர்ந்தால் அவர் குடும்பத்திற்கு ஒரு பங்கு கொடுக்கிறார்கள். ஆதரவற்ற குடும்பங்களுக்குத் தொகை எவ்வளவு குறைவாக விருந்தபோதிலும் கிடைத்தமட்டில் அனுகூலம். பொதுஜனங்கள் கொடுக்கும் தொகையைப் பெற அருகராகவேண்டும். ஒவ்வொரு மனிதனும் இப் பொது நிதிக்குச் சந்தா செலுத்தவேண்டும். அப்படிச் செலுத்தினாலே கவலையற் றிருக்கலாம்.



---

தத்துவ ஞானம் எல்லாம் ஆச்சரியத்தில் ஆரம்பித்து ஆச்சரியத்தில் முடிவடையும். அதி ஆச்சர்யம் அறியாமையின் குழந்தை; அந்த ஆச்சரியம் வணக்கத்தின் தாய். முதலாவது நமது அறிவின் பிரசவக் கஷ்டம். இறுதியானது அதன் சுக மரணம்.

# உலகில் பெரிய பொருள் எது?

(தென்காசி T. S. முகம்மது நயினூர்)

இந்தியாவை ஆண்டுவந்த மொகலாய மன்னர்களில் அக்பர் பாதுஷாவின் பிரதான மந்திரியான பேர்பில் என்பவர் ஒருநாள் ஆஸ்தான மண்டபத்திலிருந்து தம் வீட்டிற்குத் திரும்பிப் போய்க் கொண்டிருக்கும்போது, தற்செயலாய் அவர் பார்வை ஓர் மரத்தின் பக்கம் சென்றது. அங்கேஒரு சிறு பையன் உட்கார்ந்து ஒரு பிடி கடலைகளை ஒவ்வொன்ருய்க் கொறித்துத் தின்றுகொண்டிருந்தான். இதைக் கண்ட பேர்பில் அதிக ஆச்சரியமடைந்து, "ஏ, பையா! நீ ஏன் இக்கடலைகளை ஒவ்வொன்ருய்த் தின்று கொண்டிருக்கிருய்," என்று வினவினூர். அதற்குப் பையன் "ஐயா! நான் பலநாட்களாகப் பட்டினியாயிருக்கிறேன். இப்பொழுது என்னிடமிருப்பது ஒரு பிடி கடலையே. இவைகளை ஒரே வாயிற் போட்டுத் தின்றுவிடுவேனுயின் அதன் விருப்பம் மீண்டும் எழும். இங்ஙனம் மெல்ல மெல்ல ஒவ்வொன்ருய்க் கொறித்துத் தின்று கொண்டிருப்பதனுல் எனக்கு நித்திரை வந்துவிடும். தூங்கியும் விடுவேன். மனமும் திருப்தியடையும்," என்ருன். இதைக் கேட்ட மந்திரி அவன்மீது கிருபைகூர்ந்து அவனைத் தம்முடன் தமதில்லத்திற்கு அழைத்துச் சென்று உணவு கொடுத்துக்காப்பாறி வந்தார். பையன சின்ஞட்களில் நல்ல தேகாரோக்கிய நிலையை யடைந்தான்.

அக்பர் பாதுஷா பெரும்பாலும் தம் அமைச்சர்களிடம் மிக்க கஷ்டமான வினுக்களை விடுத்துக்கொண்டே இருப்பாராம். ஒருநாள் பேர்பில்லை நோக்கி "மந்திரி! உலகத்தில் மிகப் பெரிய பொருள் எது?" என்று கேட்டார். அதற்கு மந்திரி, இப்பிரச்சினை மிகக் கஷ்டமானதாயிருப்பதால் சில நாட்கள் வாயிதாத் தரவேணுமாய் வினய வந்தனத்துடன் கேட்டுக் கொண்டார். பாதுஷா ஒருமாதத் தவணை தந்திருப்பதாயும், சரியான விடை யிறுக்கவில்லையாயின் சிரச்சேதம் செய்வதாயும் ஆக்ஞாபித்தார். மந்திரி வீட்டிற்குத் திரும்பிவந்து பல அறிஞர்களை அழைத்து, "உலகத்தில் பெரிய பொருள் எது?" என வினவினூர். ஒருவர் அழகே உலகத்தில் பெரிய பொருளென்ருர். மற்றொருவர் புத்திர பாக்கியமே மிகச் சிரேஷ்டமானதென்ருர். வேரொருவர் தேகாரோக்கியமே சிரேஷ்டமான தென்ருர். பிறிதொருவர் நல்லொழுக்கமே பெரிதென்றறிவித்தார். ஒரு சிலர் அதிர்ஷ்டமே பெரிதென்றும் கூறினர். வேறு பலர் சந்தோஷமே பெரிதென்றும் மொழிந்தனர். இறுதியாக, பண்டிதரொருவர் தெய்வ வழிபாடே உலகில் பெரிய பொருளெனப் புகன்ருர். ஆனுல் இவ்விடைகள் யாவும் அதிருப்தியைத் தரத்தக்கனவா யிருந்தமையால் மந்திரிக்கு மிக்க விசனமுண்டாயிற்று. கண்களி

---

மெய்கலந்த தவறுகளே அபாயகரமானவை. மெய்க்கலப்பாலேயே அவைகளுக்கு எங்கும் பரவச் சாத்தியமாகின்றது. சுத்தப் பொய்யால் தொந்தரவு ஒருநாளும் உண்டாவதில்லை.

லிருந்து நீர் தாரை தாரையாய் வழியலாயிற்று. என் செய்வார் பாவம்! மந்திரியால் சம்ரக்ஷிக்கப்பட்டு வந்த பையன், மந்திரியின் நிலைமையைக் கண்டு வியப்படைந்து, "ஐயனே தாங்களிவ்வாறு ஏன் விசனமுற்றிருக்கின்றீர்கள்?" என்றான். மந்திரி, "இன்றைய தினமே என் வாழ்நாட்களின் இறுதி நாளாகும்," என்றார். பையன் ஆச்சரியத்துடன், "தாங்கள் அரசர் பெருமானிடம் ஏதேனும் தவறாக நடந்து கொண்டீர்களா?" என்றான். மந்திரி பாதுஷாவின் வினவையும் அதற்குச் சரியான விடை இறுக்காவிட்டால் சிரச்சேதம் செய்வதாய்க் கூறிய ஆக்ஞையையும் தெரிவித்தார். பையன் "இதற்காகவா துக்கமடைகிறீர்கள்? கவலை கொள்ளற்க; கடவுளின் சிருஷ்டியில் அறிவே மிகப் பெரிய பொருளாகும் என்பதை அரசர் பெருமானுக்கு அறிவியுங்கள்" என்றான். இதைச் செவியுற்ற மந்திரி மிக்க சந்தோஷமடைந்து, கடவுளைப் பிரார்த்தித்தார். மறுநாட் காலையில் தர்பாருக்குச் சென்று அரசருக்கு இவ்விடையைத் தெரிவித்தார். பாதுஷா அதிக ஆனந்த மடைந்து "மந்திரி! பேஷ்! நல்லவிடை பகர்ந்தீர்! ஆனால் அம்மாபெரும் பொருளாகிய அறிவு எதை உண்கின்றது? என்பதையும் தெரிவிப்பீராக" என்றார். இதைச் செவியுற்ற மந்திரிக்குத் தலையி லிடிவிழுந்தாற்போலாயிற்று. இஃதென்ன விபரீதமாய் வந்து முடிந்தது? முந்திய தடவை பையன் நம்மைக் காப்பாற்றினான். இப்பொழுது இவ்வினவிற்கு அவனாலும் விடைகொடுக்க முடியாது போல் தெரிகிறதே என்செய்வேன்" என்று மிகக் கவலைப்பட்டார். மனதை ஒருவாறு தேற்றிக்கொண்டு முன்பு வினவியதுபோல் இப்பொழுதும் ஜனங்களிடம் வெகு புத்திசாலித்தனமாக "அறிவு எதைச் சாப்பிடுகிறது?" என வினவினார். ஒருவர் பாதம்பருப்பைச் சாப்பிடுகிறதென்றார். மற்றொருவர் பாலாடையைச் சாப்பிடுகிறதென்றார். வேறொருவர் அறிவுக்குத் தத்துவமே ஆகாரமாகு மென்றார். பிறிதொருவர் அறிவு அடிபட்டுக் கொண்டிருப்பதால் அதற்கு அடியே உணவென்றார். பண்டிதரொருவர் அறிவு புத்தகத்தைச் சாப்பிடுகிறதென்றார். பேர்பில்லுக்கு இவ்விடைகள் ஒன்றேனும் திருப்தியையளிக்கவில்லை. முன்போலவே அழுது கொண்டும் பிரலாபித்துக் கொண்டுமிருந்தார். அப்போது பையன் அங்கே வந்து மந்திரியை நோக்கி "என்ன? சங்கதி என்ன?" என்றான். மந்திரி, "மகனே முன்னால் நீ சொன்ன விடையினால் என் உயிர் தப்பிப் பிழைத்தது. இப்போது மன்னர் பெருமான் "அறிவின் ஆகாரம் எது? என்று வினவியிருக்கிறார். இக்கேள்வி மிகக் கடினமானதாயிருப்பதால் நான் மிகவும் வருந்துகிறேன்" என்றார். இதைக் கேட்ட பையன் புன்னகை கொண்டு மந்திரியை நோக்கி, "ஐயா இது மிகவும் இலேசான கேள்வியே. உலகில் பெரிய பொருள் அறிவென்று கண்டு கொண்டோம். அந்த அறிவு கவலையையே ஆகாரமாக அருந்துகிறது. எவர்களுடைய தலையில் மூளையும், மூளையில் அறிவுமிருக்கிறதோ அவர்களே அறிஞரெனப்படுவர். அறிஞரே கவலைப்படுவர். கவலையே அறிவுக்கு ஆகாரமாகு" மென்றான்.

மந்திரி ஆனந்தமடைந்தவராய் ராஜசமுகத்தை யணுகி, "பாதுஷா சலாமத்! உலகத்தில் மிகப் பெரிய பொருளாகிய அறிவு கவலையை ஆகாரமாகக்

---

குழந்தைகள் பாடம் கற்கும்பொழுது தங்களுக்குப் படிக்கக் கஷ்டமாயுள்ள கடின மொழிகளை கவனியாது கடந்து செல்வதுபோல், சிலர் தங்கள் குறைகளைக் கவனிப்பதிலர்.

கொள்கிறது,'' என்றார். அரசர் சந்தோஷ மடைந்து, "சபாஷ்! மந்திரி! அவ்வறிவு,எதைப் பானம் செய்கிறது'' என்றார். இவ்வினாவைக் கேட்ட மந்திரி வீட்டுக்குத் திரும்பிவந்து, தன்னாலியன்ற மட்டும் யோசித்துப் பார்த்தார். முடியவில்லை. முன்போலவே பலரிடமும் கேட்டார். ஒருவர் அறிவு உதிரத்தைப் பருகுகிற தென்றார். மற்றொருவர் விபத்துக்களைக் குடிக்கிறதென்றார். வேறொருவர் கல்வியைப் பானம்பண்ணுகிறதென்றார். இவ்விடைகளும் மந்திரிக்குத் திருப்தியை யளிக்கவில்லை. இறுதியில் பையனை அழைத்துக் கேட்டார். பையன் மந்திரிக்குத் தேறுதல் கூறி, "ஐயா! உலகத்தில் மிகப் பெரிய பொருள் அறிவு. அதன் ஆகாரம் கவலை. அதன்பானம் கோபம்; அறிவுடையவன் கோபத்தை அப்படியே பருகி விடுகின்றான். அறிவிலிகள் அற்ப விஷயத்திலும் அதிக கோபங்கொண்டு சண்டை சச்சரவு செய்கிறார்கள். அதனால் சுற்றத்தாருக்கும் துன்பம் நேரிடுகிறது. எனவே அறிவின் பானம் கோபம் என்று மன்னர் பெருமானுக்குத் தெரிவித்து விடுவீர்களாக'', என்றான். மந்திரி பையனின் விவேகத்தை மெச்சினார். மறுநாட்காலையில் பாதுஷா சமுகம் சென்று வந்தன மளித்து இம்மூன்றாவது வினாவிற்கு விடையைத் தெரிவித்தார். பாதுஷா மந்திரியை நோக்கி, "மந்திரி! உண்மையிலே என்னுடைய இந்த வினாக்கள் மிகக் கஷ்டமானவை; அதிக முக்கியமானவை. நீவிர் அறிஞரா யிருப்பதால் இவைகட்குத் தகுந்த விடை பகர்ந்தீர். இப்பொழுது மீண்டும் ஒரு வினா பாக்கி யிருக்கிறது. அதற்கும் தகுந்த பதிலளிப்பீரென்றும் நம்புகிறேன். அதாவது இவ்வறிவின் வடிவம் எப்படிப்பட்டதென்பதையும் தெரிவிப்பீராக,'' என்றார். மந்திரி இதற்கு முன்னால் ஜனங்களிடம் முந்தின வினாக்களுக்கு விடை கேட்டதுபோல் இப்பொழுதும் அவர்களிடம் வினவினார். சிலர் அறிவின் வடிவை தேவலோகக் கன்னிகைகளுக்கு ஒப்பிட்டார்கள். சிலர் இலக்குமி தேவிக்கு ஒப்பிட்டனர். பலர் ஒரு பெரிய பெட்டியைத்திறக்கும் சாவியைச் செய்து அறிவின் வடிவை ஒப்பிட்டுக் காட்டினர். மற்றும் பலர் இருள் நிறைந்த அறையில் ஒரு மெலிந்த மனிதன் தன்கையை நெற்றியிலூன்றி ஏதோ ஆலோசனையில் மூழ்கி இருக்கும் விதமாகச் செய்து அறிவின் வடிவைக்காட்ட வேண்டுமென்றார். மந்திரி இவ்விடைகளை யெல்லாம் கேட்டுக்கொண்டு, இன்னும் நன்கு தெரியும் பொருட்டுப் பையனை அழைத்துத் தெரிவித்தார். இதனைக் கேட்ட சிறுவன், 'ஐயனே! இவ்வினாவிற்கு விடை தங்களிடம் தெரிவிக்க மாட்டேன். தாங்கள் அரசனிடம் சென்று, தங்களது நான்காவது வினாவிற்கு எனது அடிமைச் சிறுவன் விடை கூறுவானென்றும், சமூகத்தில் உத்தரவளித்தால் ஆஜர் செய்விக்கிறேனென்றும் தெரிவித்து விடவேண்டும்'' என்றான். அவ்வண்ணமே மந்திரி அரசரிடம் சென்று "மன்னர் பெருமானே! தங்களுடைய இக்கடைசி வினாவிற்கு எனதடிமைச் சிறுவன் விடை தருவான். தாங்களநுமதித்தால் அவனை ஆஜர் செய்விக்கிறேன்,'' என்றார். அரசர் அதற்குச் சம்மதித்தார். மந்திரி ஒரு சேவகனை நோக்கிச் சிறுவனை அழைத்துவருமாறு கட்டளையிட்டார். பையன் ராஜகுமாரர்களைப்போல் ஆடையாபரணங்க ளணிந்து சமுகத்தை அடுத்து மிக மேதை மரியாதையோடு வந்தன மளித்து மௌனமாய் நின்றான். அரசர்

---

மனிதனுடைய முதன்மொழி "ஆம்'' இரண்டாவது "அன்று'' மூன்றாவதும் இறுதியானதும் "ஆம்''—பலர் முதலாவதோடு நின்றுவிடுவர். வெகு சிலரே இறுதிமொழி வரைச் செல்வர்.

பையனை நோக்கி, "ஏ! பையா! நீ எனது வினவிற்கு விடை கொடுப்பாயா? மேலும் அறிவின் வடிவம் எப்படிப்பட்டது என்பது உனக்குத் தெரியுமா?" என்றார்.

பையன்:—"ஆம் எனக்குத் தெரியும்"

அரசர்:—"ஆனால் தெரிவிப்பாயாக"

பையன்:—"ஓர் விண்ணப்பம்"

அரசர்:—"என்ன?"

பையன்:—எனக்கு ஒரு மணிநேரம் ராஜரிகம் கிடைக்கவேண்டும். மேலும் தாங்களுட்பட எல்லோரும் இப்பொழுது தங்களுக்கு எவ்வித மரியாதையுடனும் கீழ்ப்படிதலுடனும் நடந்து கொள்கிறார்களோ அவ்விதமே இந்த ஒருமணி நேரம் எனக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். நான் தங்களுக்கு அறிவின்வடிவம் எப்படி யிருக்கிறதென்று மிகத் தெளிவாய் உணர்த்துவேன்.

அரசர் சற்றுநேரம் மௌனமாயிருந்து விட்டுப் பையன் வேண்டுகோளுக்கிணங்கி, சிம்மாசனத்தை விட்டுக் கீழே இறங்கி ஒரு பக்கம் வணக்கமாய் நின்றார். பையன் ஆடம்பரத்தோடு சிம்மாசனத்தில் ஏறி வீற்றிருந்தான். பையன் சற்றுநேரம் மௌனமாயிருந்து விட்டுக் கொலையாளியை ஆஜர் செய்யும்படி அங்குள்ளவருக்குக் கட்டளை யிட்டான். இதைக்கேட்ட மாத்திரத்தில் கொலுமண்டபத்தில் ஆஜராயிருந்த யாவரும் பதைபதைத்துத் திகிலடைந்தவர்களாய்ப் பையனின் பக்கம் பார்க்க ஆரம்பித்தார்கள். (கொலையாளி ஆஜராகிறான்.) பையன், "அரசர் பெருமான் இராஜங்கத்தின் குற்றவாளியா யிருக்கிறார். அவரைக் கொலைசெய்தல் அவசியமா யிருக்கிறது. எனவே இப்பொழுதே கொலை செய்புங்கள்" என்றான். இவ்வார்த்தையைக் கேட்ட யாவரும் மிக்க கோபமடைந்து தத்தம் வாளாயுத்தை யுருவினவர்களாய்ப் பையனின் பக்கம் முனைந்தார்கள். பையன் அவர்களை நோக்கி அதட்டிய வண்ணமாய், "நான் அரசனாயிருக்கிறேன். நீவிர் யாவரும் என் உத்தரவுக்குக் கீழ்ப்படிதல் வேண்டும். ஒருமணி நேரம் நான் அரசனாயிருக்க வேண்டு மென்பது எனக்கும் அரசர் பெருமானுக்கும் ஏற்பட்ட உடன்படிக்கை" என்றான். பாதுஷாவின் சைகையால் தர்பாரிலுள்ளவர்கள் யாவரும் தத்தம் வாளாயுதத்தை உறையிலிட்டுக்கொண்டு மௌனமா யிருந்தனர்.

பையன்:—(மிக்க கர்வத்தோடு அரசனை நோக்கி) தாங்கள் தலை குனிவீர்களாக. (கொலையாளியைப் பார்த்து) வாளை வெளியிலெடு" என்றான். அரசர் பையனின் உத்தரவுப்படி தலைகுனிந்த வண்ணம் நின்றான். (கொலையாளி வாளை யுருவி வெட்டச் சென்றான்) பையன் 'போதும்! மன்னரே! நோக்குக! மகா யாட்சிமை தங்கிய சக்கரவர்த்தி கேவலம் ஒரு பையனின் முன்பு எவ்வளவு இயலாத் தன்மையோடும் தாழ்மையோடும் நிற்கின்றார். இதுவே அறிவின் சித்திரமாகும். அரசனை ஆண்டியாக்குவதும் ஆண்டியை அரசனாக்குவதும் இவ்வறிவின் விவேக தந்திரமாகும்"

---

சாதாரண ஜனங்கள் மதிக்கும் உபயோகமற்ற விஷயங்களை அறியாதிருத்தற்கு மனோதைரியம் தேவையே. ஆனால் அந்த மனோதைரியம் உண்மையை விரும்புவார்க்கு அத்யாவசியம்.

என்று சொன்னவனுய்ச் சிம்மாசனத்தினின்றும் கீழே இறங்கி மன்னருக்கு வந்தனமளித்துச் சென்ருன். (1300-வருடங்களுக்கு முன் அரேபியா தேசத்தி லவதரித்த எழுதப்படிக்கத் தெரியாத எம்பெருமான் நபிகள் நாயகம் அவர்க ளும் கடவுளின் சிருஷ்டியில் அறிவே மிகச் சிரேஷ்டமானதென்று கூறிப் போந்தார்.)

குறிப்பு:—பண்டைக்கால அரசர் பெருமக்களைப் பற்றியும், மதியமைச் சர்களைப் பற்றியும் எல்லா மொழிகளிலும் இத்தகைய கதைகள் வழங்கி வரு தல் சகஜம். ராயர்—அப்பாஜி கதை, பட்டி—விக்கிரமாதித்தன் கதை முதலி யன இந்த வரிசையிற் சேரும். கன்ன பரம்பரையாகவும் எத்துணையோ கதைகள் வழக்காற்றில் நிலவுகின்றன. நமது நண்பர் ஜனுப் T. S. முகம்மது நயினுர் அவர்கள் ஈண்டுக் குறிப்பிட்டுள்ள அக்பர் பாதுஷா—பேர்பில் வர லாற்றையும் மேற்படி வரிசையிற் சேர்க்கலாம் என்பது எமது கருத்து. இவை யெல்லாம் உண்மையில் நடந்திருக்குமா என்பது வேறு விஷயம். அது விவ காரத்திற்குரியது. அறிவுக்கு விருந்தாயிருத்தல் பற்றியே இத்தகைய கதை கள் சர்வஜன செல்வாக்குப் பெற்று நிற்கின்றன.

"உலகில் பெரிய பொருள் எது?" என்னும் இக்கதையில் சுவையுள்ள நான்கு உண்மைகள் மிளிர்கின்றன. உலகில் மிகப் பெரிய பொருள் அறி வென்பதும், அவ்வறிவுடையோர் வாழ்க்கை மேம்பாட்டில் சிரத்தையும் கவ லையு முடையராயிருப்பர் என்பதும், அவர் கோபம் நீங்கிய குணநலமுடையரா யிருப்பர் என்பதும், புத்திமானே பலவான் என்பதும் இக்கதையினுல் நன்கு விளங்கும்.

"அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்
என்னுடையரேனும் இலர்.

என்னும் பொய்யா மொழியின் பொருள் உங்கே ஒப்பு நோக்கத்தகும். (ப-ர்)

## சந்தா நேயர்களுக்கு

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகை ஒவ்வொரு தமிழ் மாத முதல் தேதியிலும் எக்காரணத்தை முன்னிட்டும் நிறுத்தப்படாமல் தபாலில் சேர்க்கப் பட்டு வந்தும் சிலர் சஞ்சிகை கிடைக்கவில்லை என்று எமக்கு அடிக்கடி தெரிவிக்கின்றனர். இந்த நண்பர்கள் அந்த அந்த ஊர் போஸ்டு மாஸ்டருக்கு விஷயந் தெரிவித்தால் சஞ்சிகைகள் ஒழுங்காகக் கிடைத்து வரும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேம்.

ப-ர்.

முதலில் தூசியைக் கிளப்பிவிடுகிறேம், பின்னுல் பார்க்க முடியவில்லை என்று முறையிடுகிறேம்.




# வாலி மோக்ஷம்.

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

இராமாயணம் என்னும் இதிகாசத்திலுள்ள சரிதையில் வாலி மோக்ஷ மென்பது ஓர் பாகமாக விளங்குகின்றது. இராமா யணக் கதையையோ பாரதக் கதையையோ அறியாதாரை நம்நாட்டிற் காண் டலரிது. எனினு மிக்கதைகளாலறியக்கிடக்கும் நீதிகளையும் தத்துவங்களையும் ஆராய்ந்தறிந்தோர் மிகச் சிலரே யாவர். ஆகலின் யாவர்க்கும் நன்கு தெரிந்த கதையையே 'அரைத்த மாவை அரைப்பது'போல, மீட்டு மீட்டும் சொல் லிக்கொண்டிராமல் ஆராய்ச்சி முறையில் இக்கதையின் போக்கையும் உண்மை யையும் தத்துவத்தையும் வரைவாம்.

வாலிமோக்ஷம் என்னுமிச் சொற்றொடர் அதன் பொருளுக்குப் பொருத்தமானதாக விருக்கின்றதா வென்பதை முதலிலாராய்ந்து விட்டுப் பின்னர் கதையில் நுழைவோம்.

வாலி யென்னும் வானரவேந்தன் மோக்ஷ மடைந்ததைக் குறித்துக் கூறுதலால் இதற்கு வாலிமோக்ஷம் எனப் பெயரிடப்பட்டது. ஆனல் உண் மையில் வாலிமோக்ஷ மடைந்தனனு? எனவோர் ஐயமெழுமாயின், 'இல்லை,' எனவே இதற்கு விடை யிறுத்தல் வேண்டும். ஏனெனில், மோக்ஷமடைதற் கேற்ற நிலையில் வாலி இருந்தானில்லை. அவன் ஞானியல்லன். ஞானமே மோக்ஷத்திற்கு நேர் சாதனமாமென்பது அனைவர்க்கு மொப்ப முடிந்ததோர் விஷயமாகும். ஈண்டு மற்றொரு விஷயத்தையும் நாமறிய வேண்டியவர்களா யிருக்கிறோம். அதாவது, மோக்ஷ நிலையைப்பற்றிப் பல அபிப்பிராய பேதங் கள் காணப்படுகின்றன. கைலாசத்திலோ, வைகுண்டத்திலோ, ஏதோ வோரி டத்தில் கடவுளெதிரில் அவரைத் தரிசித்துக்கொண்டும் திருத்தொண்டு பூண்டு மிருத்தலே பேரானந்தப் பெருஞ்செல்வமாகிய மோக்ஷமாமென்பது சிலர் கொள்கை. எங்கும் வியாபகமாயுள்ள பரம்பொருளில் இரண்டறக் கலந்து நிற்றலே வீட்டுநிலை யென்பது வேறு சிலர் கொள்கை. எது எவ்வாருயினும் கர்ம வசப்பட்டு மீண்டு மீண்டு பிறவாதிருத்தலே மோக்ஷநிலையா மென்பதில் எவர்க்கும் ஆக்ஷேபமிராது. ஆகவே, அந்நிலையை யடைதல் வேண்டுமாயின்

---

தன்னைக் காண்பதுவே மிகக் கடினமான காரியம். பிறர் செயல்களில் குற்றம் காண்பதுவே மிக எளியகாரியம்.

இருள் சேரிருவினையும் சேராதிருத்தல் வேண்டும். வினை வசப்பட்டோர்க்குப் பிறவி யொழிதலில்லை யன்றோ ? ஆகவே, வாலியானவன் மற்றீண்டு வாரா நெறியாகிய முத்திப்பேற்றிற் கருகனு யிருந்தானெனக் கழறுவதற்குச் சிறிது மாதாரமில்லை. அவன் சிவபூசையிற் சிறந்தவனென்பதி லையமில தெனினும் பல துர்க்குணங்கள் அவனிடம் சூடி கொண்டிருந்தன. அகங்காரம் அவனை விட்டுச் சிறிது மகலவில்லை. தம்பியின் மனைவியை யபகரித்ததாகிய பெரும் பாதகச் செய்கைக்கு அவனுட்பட்டிருந்தான். 'இல்லிறப்பான் கண் பகை பாவம் அச்சம் பழியெனும் நான்கு மிகவா' திருக்கு மென்ற பொய்யா மொழி யின்படி, பரதாரம் நச்சும்பதகன் பரமபதமெய்தினு னென்கை பொருந்தாக் கூற்றாதல் காண்க. அன்றியும் அவன் பின்னர் வேடனாகப் பிறந்ததாகப் பாரதம் கூறுவது கொண்டும் இஃது உறுதிப்படுத்தப்படும். எனவே, வாலி, மோக்ஷ மடைந்தானென்று மொழிவது, சாதாரணமாக ஒருவன்—அவன் எத்துணைக்கொடிய பாதகனாயினும்—இறந்துபடின், பரமபத மடைந்தான், ஆசாரியர் திருவடி யடைந்தான் எனக் கூறுவது வழக்கமா யிருத்தலின், அம் முறைமை பற்றிக் கூறும் உபசாரவழக்கா மென்பதன்றி உண்மைக் கூற்றன் றென்பது துணிபாம். இனி, கதைச் சுருக்கத்தை யீண்டுக் காட்டுவாம்.

வாலியென்பா னொரு வானரவேந்தன். கிஷ்கிந்தையில் அரசாண்டிருந் தவன். அவனுக் கோரிளைய சகோதரன் சுக்கிரீவ னெனப்படுவோ னிருந் தான். இவ்விரு சகோதரரும் ஒரு தாய்வயிற்றிற் சனித்தோராயினும் தந்தைய ரிருவர். மூத்தவன் இந்திரன் செம்மல். இளையவன் இரவியின் தோன்றல். அவ்விருவரும் மிக்க ஒற்றுமையுடன் வாழ்ந்து வந்தனர். இத்தகையோரை ஓரற்ப விஷயம் கடும்பகைவராக்கிப் பிரித்து விட்டது. ஓர் காலத்தில் வாலி ஓர் சூரனுடன் அமராடி அவனை யடித்துத் துரத்திச் சென்றான். அவ்வசுரன் அஞ்சியோடி ஓர் மலைக் குகைக்குட்புகவே, வாலியு மவனைவிடாது துரத்திச் சென்றான். நாள் பல கழிந்தும் வாலி திரும்பாததுகண்ட வானரர்க ளஞ்சி னர். வாலி மாண்டான் எனக்கருதி வருந்தி, அவ்வசுரன் வந்து தங்களை வருத்தாதபடி குகைவாயிலை யடைத்துத் திரும்பினர். சுக்கிரீவன் தமயன் கேட்டை யுன்னி யுன்னிப் பெருந்துயருழந்தா னெனினும் பல முதியோர் மொழிந்ததற்கிணங்கி முடிசூடிப் படி யாண்டிருந்தான்.

அசுரனை வதைத்து மீண்டவாலி வாயிற்றடையைத் தகர்த்தெறிந்து சென்று, தன் தம்பி அரசாண்டிருத்தலை யறிந்து கடுஞ்சினமெய்தி, அரசைக் கவரவே இவன் வாயிலை யடைத்துப் போந்தானாதல் வேண்டுமென்னுந் தவ றான வெண்ணங்கொண்டு சினங்கொள்ளலும், அதுகண்ட இரவி சேய் தான் குற்ற மற்றவனெனவும், மூத்தோர் வார்த்தையை மீற முடியாமல் அரசை யேற்று நடத்தி வந்ததாகவும், தன் பிழையை மன்னிக்கவேண்டு மெனவும் இரந்து வேண்டியும், அவன் இரங்காமல் ஓடோடத்துரத்தி யடிக்கத் தொடங் கினன் அடிபொறுக்க மாட்டாமல் சுக்கிரீவன் வாலி செல்லக்கூடாதவோர் மலையிற் சென்றொளிந்தான். அம்மலையிற் செல்லின் முன்னமோர் முனிவன் மொழிந்த சாப மொழிப்படி தன்னாயுட்காலம் முடிவடையு மென்பதை யுன்னி வாலி ஆண்டுச் செல்லா தொழிந்தான். மலையிலொளிந்த சுக்கிரீவனுக்கு அனு மான் முதலிய வானரவீரர் பலர் நண்பரா யமர்ந்திருந்தனர். நிற்க,

---

நாம் பிறரிடம்கண்டு பரிகாசம் செய்யும் குற்றங்கள் நமக்குள் நம்மையே பரிகாசம் செய்யும்.

சிற்றன்னையின் சூழ்ச்சியால் மணிமுடி சூடவேண்டிய நாளில் சடைமுடி சூடித் தம்பியோடும் மனைவியோடும் காகுத்தன் கானுறையுங் காலத்துத் தென்னிலங்கை வேந்தன் மிதிலை வேந்தன் திருமகளின் எழினலனைச் செவியுற்று, நம்பியும் தம்பியு மில்லாத சமயம் பார்த்து அபகரித்துச்சென்று அசோக வனத்தில் அருஞ்சிறை யிட்டனன். தசாதன் மைந்தர் சீதையைக் காணாது நாற்றிசையும் நாடித்தேடிச் செல்லு நெறியில், சவரியென்னு முதியாள், சுக்கிரீவனிருக்கும் மலையைச் சுட்டி, ஆண்டுச் சென்று செங்கதிரோன் மைந்தனுடன் நட்புக்கொள்ளின் அவனுதவியால் சீதையினிருக்கையைக் கண்டறியலாம் எனக் கழறினாள். அங்ஙனமே இராமலக்ஷ்மணர் சுக்கிரீவனைத் தேடிச் சென்று அம்மலைமேலேறிப் போகையில், அவர்களைக் கண்ணுற்ற வாலியினவல், இவர்கள் வாலியேவலால் நம்மைக்கொல்ல வருகின்றனர் போலு மென்றையுற்று ஒளிப்பிடந் தேடியோட, அனுமான் அவனைத்தேற்றி, வரும் வீரர் யாவரென்பதைக் கண்டறியவெண்ணி, உருமாறிச் சென்று மறைந்து நோக்கினான். "இவர்கள் வாலியா லனுப்பப்பட்டவரல்லர். அருமருந் தன்னதோர் பொருளை யிழந்து அதனைத்தேடுவான் போந்தனராதல் வேண்டும். இவர்கள் தெய்விக முடையோராய்த் தோற்றுகின்றன"ரெனத் தன் நுண்ணறிவா லவர்தம் நிலைமையையோர்ந்த வாயுசுதன் அவரெதிர் சென்று தானின்னா னென்பதையும் தனதுண்மை யுரு வித்தன்மைய தென்பதையும் விளக்கிக்காட்டி, அவர் தம் வரலாற்றையு மறிந்து மீண்டு, சுக்கிரீவன் மாட்டு யாவற்றையும் கூறி, அவனையழைத்து வந்து அவ்விராகவன் முன்னர் விட்டான். இருவருக்கும் நட்புண்டாயிற்று.

இரவிமைந்தன் இன்னலைச் செவியேற்ற இரவிகுலத்தோன்றல் மிக்க சினங்கொண்டவராய், "சென்றது செல்ல. இனி உனது பகைவர் எனது பகைவர். உன் துன்பம் என் துன்பம். உன் சுகம் என்சுகம்" என்றியம்பித் தேற்றினர். அனுமான் அப்போது "ஐயனே! பிராட்டியாரைப் பிரித்தோர் கொடிய அரக்கரே யாவர். அவர்கள் மாயாவிகள். தேவியாரை எவ்வுலகத்தில் சிறையிட்டனரோ! ஒரு சிலர் மட்டும் தேடிச் செல்வாராயின் அவரிருப்பிடத்தைக் கண்டறிதற்குப் பல யுகங்களாகும் ஆகலின் வாலியை வதைத்துச் சுக்கிரீவனுக்கு அரசுரிமையை யளிக்கின், வாலியின் வசத்துள்ள எழுபது வெள்ளம் சேனை யவன் வசப்பட்டுவிடும். ஏககாலத்தில் நாலா பக்கங்களிலும் தேடுமாறு சேனைகளை யேவின் சீதையினிருக்கை வெகு விரைவில் அறியப் பட்டுவிடும். பின்னர் சேனைகளின் துணையால் சீதையை மீட்கும் காரியமும் எளிதாகும் என்றாலோசனை கூற, இராமச்சந்திரன் அதனை அங்கீகரித்து அக்கணமே வாலி வதத்தினிமித்தம் புறப்படலாயினர்.

இரகுகுலோத்தமனால் துன்பந் தொலையுமெனச் சுக்கிரீவன் அகங்களிப்புற்றனனேனும், தன் மூத்தோனாகிய வாலியின் வலிமையை நன்கறிந்தோனாகலின், அவனைக் கொல்லும் வல்லமை இராகவனிடத்துளதாமோ வெனச் சங்கித்து, அநுமானைத் தனியே யழைத்தேகித் தன்னையத்தைச் சாற்றினான். அனுமான் "ஐயனே! ஐயமுறேல்! அகில காரணனான அச்சுதனே அறத்தை நிறுத்துவான் வேண்டி அவனியி லிராமனா யவதரித்தனன்" எனப் பல வேதுக்களால் அவ்வையத்தை யகற்றி, எனினும் "மராமரத்தைத் துளைக்கச்

---

மதப் பிடிவாதமுடையவர் தங்கள் காலத்தில் மட்டுமே மதியுடையவராய் மதிக்கப்படுவர்.

செய்தல் வாயிலாக இராமனது இணையிலா வல்லமையைக் கண்டறிவோ" மெனக் கழறிக் காகுத்தனை யழைத்தேகிக் காட்டலும், காகுத்தன் கடுங்கணை யொன்றினால் வானுறவோங்கிய தருக்களேழினையும் துளையாக்கினான். வாலியினாற் கொல்லப்பட்டு ஆவிநீத்த துந்துபியினுடலம் மலைபோல் அங்குக் கிடத்தலைக் கண்ணுற்று, அதன் வரலாற்றை யறிந்த கடல் வண்ணத் தண்ணலின் கட்டளையால் இளையவனு மிலக்குவன் காலினாலுந்தலும் அது ககன முகடளவுஞ் சென்று மீண்டது. இவ்வாற்றான் அவர்தம் வல்லமையைப் பரிசோதித்தறிந்த பகலோன் மைந்தன் இவ்விராகவன் வாலிகாலனே யெனத் துணிந்தனன்.

அனைவரும் வாலிவதத்தின் பொருட்டு அவனதுறைவிடம் நோக்கிச் சென்றனர். சக்கரவர்த்தி திருமகன் வாலியை வலிய வாதுக்கழைக்குமாறேவினன். அருக்கன் மைந்தன் அவ்வாறே அமர்பொரவருமாறு கூவி ஆர்ப்பரித்தவளவில், வாலி கடுங்கோபமெய்தி வந்து பொருதான். இருவருக்கும் கடும்பூசல் நிகழ்ந்தது. இருவர்க்கும் வேற்றுமை கண்டறிய வியலாமையின் தசரதாத்மசன் ஒன்றும் புரிய வியலாதவராயினர். சுக்கிரீவன் அடிபொறுக்க மாட்டா தோடிச் சென்று முறையிட, பூங்கொடி யொன்றினை அவன் கழுத்திலிட்டுச் செல்கவென் றேவினன் இராமன். சுக்கிரீவன் சுருக்கெனச் சென்று வாலியை யழைக்க மீண்டு மிருவரும் கடும்போர் புரியும் சமயம், வாலி தன்னிளவலைக் கழுத்திலோர் கரமும் இடையிலோர் கரமும் செலுத்தித் தூக்கித் தரைமேல் மோதிக் கொல்லத் துணிகையில், கோசலையின் குலமதலை வன் கணையேவி வாலியை வதைத்தான்.

இதுவே வாலி மோக்ஷக்கதைச் சுருக்கம். நாவலரும் பாவலரும் இதனைத் தத்தம் திறமைக்கேற்பப் பெருக்கிக் கூறுவர். வாலி எழுந்து நின்றவளவில் உடுக்குலங்கள் (உடு=நக்ஷத்திரம்) பல பல உதிர்ந்தன வென்பர். மாமரங்களேழையும் கடக்கக்கூடாமையின் சந்திர சூரியர் ஒதுங்கிச் செல்வரென்பர். தருக்களேழையும் துளைப்படுத்திச் சென்ற விராகவன் பகழி ஏழுலகம் ஏழு கடல் முதலிய ஏழென்னுந் தொகை கொண்டவை யனைத்தையுமுருவி மேலத்தொகைப் பொருளின்மையால் மீண்டதென்பர். இன்னும் பலவாறு முரைப்பர். "இப்படியு மிருக்குமோ?" வெனக் கேட்போர்க்கு, "இது உயர்வுநவிற்சியணி, இது மிகையுயர்வுநவிற்சியணி, இது தொடர்புயர்வு நவிற்சியணி, உருவகவணி, இல்பொருளுவமையணி" என்பர். இவ்வாறு கூறுவாரனைவரையும் மேற்கொண்டவர் கம்பர் என்னும் கவிச் சக்கரவர்த்தியாராவர். அக்கவிச் சக்கரவர்த்தியாரியற்றிய இராம காதையின் கவிநயங்களையும் கற்பனாலங்காரங்களையும் கற்றறிந்த புலவோர் வாலி மோக்ஷக் கதையை நாலுநாளும் போதாதெனுமாறு பிரசிங்கிப்பர். நான்கு நாளல்ல நாற்பது நாள் நவின்றாலும் கதை இவ்வளவே யன்றோ; அணிகளும் அலங்காரங்களும் கற்பனைகளும் நமக்கு வேண்டாம். அவற்றை யறிந்து ஆனந்த மெய்துவோர் எய்துக. கம்பர் கவியின்பங் கண்டு களிப்போர் களிக்க. அவை கவிவாணர்க்கும் புலவர்களுக்கும், வித்துவான்களுக்கும் தேவை. கற்பனைகளனைத்தையும் இவை கற்பனை (பொய்) யென நீக்கி உண்மை காணவேண்டு

---

விக்கிரகங்கள் சந்தேகத்திற்கு இடமாயும், வணங்குவோர் இதயத்திற்கு (எவ்வித நல்லுணர்ச்சியும் தரச் சக்தியற்ற) சர்வ சூன்யமாயும் ஆகும்பொழுது தான் "விக்கிரக ஆராதனை" தவறாகும்.

வோர்க்கு அவற்றாற் பயன் யாது? நிற்க இவ்வாலி சுக்கிரீவரின் சரிதையில் காணப்படு முண்மைகளை யாராய்வாம். முதலில் வாலியை இராமன் கொன்றது சரியாவென்று பார்ப்போம்.

நியாயம் சிறிதுமின்றி வாலி தன்னை இம்சித்துக் கொல்லவும் துணிந்ததாகவும் தன் மனைவியையும் அபகரித்துக் கொண்டதாகவும் சுக்கிரீவன் கூறியதை மாத்திரமேற்று இராமன் வாலியைக் கொன்றது முறைமையாகாது. இருவர் தம் சொல்லையு மெழுதரங் கேட்டு நியாயம் வழங்குதல் செங்கோன் மன்னர்க்கு—பொதுவாக அனைவர்க்குமே—உரிய முறைமையாம். "வாலியை விசாரித்தல் அவசியமன்று. சுக்கிரீவன் அனுமான் இவ்விருவரும் பொய்ம்மொழி புகன்றறியாப் புனிதரென்பதை யவரறிந்த பின்னரே அதற்குடன்பாடுடையவராயினர்'' என்று ஓர் சமாதானம் கூறப்படலாம். இது ஏற்றுக் கொள்ளத் தக்கதே.

இனி, வாலிவதத்தைக் குறித்து அது தவறாகுமென்று இலக்குவனே இராமனிடம் இசைத்தனன். வாலியைக்கண்ட காகுத்தன் வியப்புற்று "தம்பி! இவ்வுருவத்தைக் கவனித்துப் பார். இவற்கொப்பாக எவரைக் கூறலாம். எக்கடல் எக்காற்று எவ்வுலகம் எவ்வானம் இவனுரம் பெற்றவுடலுக் கொப்பாகும்'' என்றியம்ப, இலக்குவன் "ஏந்தால்! இஃதோர் வியப்பாமோ! இத்தகைய பராக்கிரமம் பொருந்தியவனைத் தன்னுடன் பிறந்தோனென்பதையு மெண்ணுமல் கொல்லக் கருதி, ஓர் காலனை யழைத்து வந்த சுக்கிரீவன் செய்கையன்றோ வியப்பிற்குரித்தாகும், ஓரன்னையி னகட்டிற்றோன்றி, உடனுண்டும் உடுத்தும் உறங்கியும் ஆடியும் பாடியும் உறைந்த முன்னோனையே முடிக்க வெண்ணிய விப்புண்ணியன் பிறரை யென்செய்யான்! இவனை முன்னே முடித்தலே முறையாம். இவன் வார்த்தைக்குடன்பட்டுத் தாங்கள் செய்யக் கருதிய விப்போர் பிறரால் பழிக்கப்படாத போராக விருத்தல் வேண்டுமே யென்னும் கவலை யென்னுள்ளத்தைக் கவர்ந்து நிற்கின்றது'' எனத்தன் வெறுப்பை விளக்கி நின்றான். இதற்குச் சமாதானம் அப்பொழுதே இராகவனுலிறுக்கப்பட்டது. அஃதியாதெனின், "அப்பா! பித்துக் கொண்டாற்போன்ற மிருகங்களின் ஒழுக்கத்தில் நியாயா நியாயங்கள் ஆராயத்தக்கனவாமோ? விலங்குகள் விவேக சூனிய முடையவை யன்றோ? இங்ஙன மொழுகுதல் அவற்றின் இயற்கைப பண்பனறோ? விலங்குகளில் மாத்திரமல்ல மனிதருள்ளும் பரதன்போன்ற சகோதரவாஞ்சை யுடையோரைக் காண்ட லரிதே யன்றோ! உலகில் குற்ற மற்றவர்களா யொழுகல் எத்தகையோர்க்கு மியலாததாகும். நல்லொழுக்க முடையோரைக் குறைவாகவும் இல்லாரை யதிகமாகவுமே இவ்வுலகம் பெற்றிருக்கும். ஆகலின் நற்குணத்தைக் கண்டு நட்புக் கோடலே நமது கடமையாம்'' என்பதேயாம்.

மாதவ வேடம்பூண்ட மன்னன் மைந்தன் வழுத்திய மாற்றம் எத்துணைப் பொருத்த முடையதென வாராய்வோம். ஒழுக்கந் தவறி நடத்தல்

---

பண விஷயமாய் நம்பத் துணியாத இடத்தில் ஆன்ம விஷயமாய் நம்பத் துணிவது எவ்வளவு விபரீதம்! மதாச்சாரியார் காலணக் கொடுத்தால் அது செல்லுமோ செல்லாதோ என்று சந்தேகிப்போம். ஆனல் அவர்கள் கூறும் மதத்தை ஆராயாது சரி என்று அங்கீகரித்துவிடுகின்றோம். என்னே மனிதர் மடமை!

அறிவற்ற விலங்குகளுக் கியல்பேயாம் எனத் தம்பிக்குச் சுக்கிரீவனது தீச் செய்கையின் பொருட்டுக் கூறிய சமாதானம் சரியெனக் கொண்ட விவர், வாலியின் வரம்புகடந்த செய்கையையும் அம்முறையிற் கொண்டிருத்த லவசிய மாம். அவ்வாறு கொண்டிருப்பின் வாலியைக் கொல்லத் துணிந்திருப்பரோ? இரார். ஆகவே, இச்சமாதானம் தன் செய்கை சரியன்றெனத் தடுத்த தம்பியை யொருவாறடக்கக் கூறப்பட்ட சமாதானமேயன்றி உட்கருத்துடன் கூறப்பட்டதாகக் கொள்ளுதற் கிடமின்று. அன்றியும், பாணத்தாலடிபட்டு பாரிற்புரளும் வாலி இராகவனை நோக்கி "தசரதன் மைந்தனே! என் மாட்டென் பிழை கண்டனை? யானுனக்கிழைத்த தீமைதான் யாது?" எனக் கடாவியபோது, தம்பியின் தாரமானவளைக் கவர்ந்த குற்றத்தை யவன்மேல் சாட்ட, அவ் வாலி, "மிருகங்கள் நாங்கள். உங்களுக்கிருப்பதுபோன்ற மணவினை முறைகளெங்களுக் கின்று. உணர்வு சென்றுழிச் செல்வதே எங்குல வொழுக்கம். ஆகலின், என் செய்கை குற்றமுள்ளதாவ தெங்ஙனே?" மெனக் கூறுகிறான். அதற்கு இராகவ னிறுத்த விடை வியப்பிற் குரியதாகும். "ஓ! வாலியே! நீங்கள் சிறந்த தேவர்களுக்குப் புதல்வராகத் தோன்றினவர்கள். அறநெறியைத் திறம்பட வறிந்தோர். ஆகவே, உங்களை விலங்கென மதித்தல் ஏற்புடைத்தன்று" என்பது அவரது விடையின் சுருக்கமாகும். சுக்கிரீவனைக் குற்றமுடையோ னென நவின்ற தம்பிக்குப் 'பித்தாயவிலங்கின் செயலினைப் பேசலாமோ?' வெனக் கழறியவர் இங்கு இவ்வாறு இயம்புவது போற்றத் தக்கதாகுமோ? தம்பியை விலங்கெனக் கொண்டவர் தமயனையும் அங்ஙனங் கொள்ள ஒருப்படாததேன்? இம்மாற்றம் முன்னுக்குப் பின் முரண்பட்டதன்றோ! தவிர,

வாலியை எதிர்த்துப் பொராது மறைந்து நின்று அம்பு தொடுத்துக் கொல்லுதல் யுத்த தருமமாகாது. இக் கேள்வியை வாலியே கேட்டதாகவும் அப்பொழுதே இலக்குவன் தக்கவாறு விடைகூறி அவன் வாயை யடக்கிவிட்டதாகவும் கூறச் சிலர் முன்வரலாம். வாலி கேட்டதும் இலக்குவன் விடையளித்ததும் உண்மையே. "முன்னரே சுக்கிரீவன் என தண்ணனை யடைக்கலம் புகுந்தான். அப்பொழுதே உன்னைக் கொல்வதாக அவனுக்கு அபயப் பிரதானம் பண்ணிவிட்டார். நேர் நின்று பொருங்கால் நீயும் பயந்து அடைக்கல மென்பையாயின் உன்னைக் கொல்லுதல் கூடாது. அதனுல் அவர் வார்த்தை (பிரதிஜ்ஞை) பழுதுபடும். இதுவே மறைந்து நின்று கொன்றதன் காரணம்" என்பதே அவர் சாற்றிய சமாதானம்.

சுக்கிரீவனைவிட வாலி இராமனை நன்குணர்ந்தவன். அவரது தெய்வத் தன்மையிலும் முறை தவறா நெறியிலும் மிக்க நம்பிக்கை கொண்டவன். சாதாரணமான ஓரரச குமாரனெனக் கருதாமல், அறநெறி நிறுத்தவந்த ஆதிபகவனே இராமனென்று அவன் உறுதியா யெண்ணி யிருந்தான். வாலி போர்க் கெழுங்கால் அவன் மனைவியாகிய தாரை யென்பவள் தடுத்து, நாயக! "உன் தம்பி தன் சொந்த பலத்தை நம்பி அமர்பொர வழைத்தானில்லை. இராமனென்பா னொருவனைத் தனக்குத் துணையாகக் கொண்டிருக்கின்றானும். அவ

---

தத்துவ ஞானிக்குப் பிறர் யோசனைகளைக் கேட்க விருப்பமும், ஆனல் தானே ஆராய்ந்து முடிவுகட்ட மனவுறுதியும் வேண்டும். உழைப்பும் இருந்து விட்டால் அவன் "இயற்கை"யின் ஆலயத்திலுள்ள இரகசிய மண்டபத்தினுள் நுழையவும் எதிர்பார்க்கலாம்.

னைக் கொண்டுன்னைக் கொல்விக்கும் சூழ்ச்சி யுடையோனாய் வலிந்தழை கூவு கின்றான். செல்லுதல் தவிர்க" எனச் சாற்றித் தடுத்தனள். அதுகேட்ட வளவில், வாலி யுளநைந்து "பெண்ணே! உன் பேதைமையால் பெரும்பிழை செய்தனை. இராமனை யாரென நினைத்தனை! தருமநெறியைத் தன்னொழுக் கத்தால் யாவர்க்கும் காட்டுவா னவதரித்த வப் பெருமான் விஷயத்தில் அப சாரப்பட்டனையே" எனப் பலவாறு இராமனைப் புகழ்ந்து கூறிப் போருக்குச் சென்றான். "ஒருகால் தாரை சாற்றியவாறு இராமன் வந்திருப்பானோ?" வென்னும் ஐயம் அணுவளவு மவனுள்ளத் தெழுந்த தில்லை. அவ்வா றெழுந் திருப்பின் அவன் எச்சரிக்கையோ டிருந்திருப்பான். தன் விஷயத்தில் இவ் வளவு நம்பிக்கையோ டிருந்தவனை மறைந்து நின்று கொல்லுதல் வஞ்சனை யன்றோ? நம்பிக்கைத் துரோக மன்றோ?

அவன் அவ்வாறு நம்பி யிருந்தானென்பது இராமனுக்குத் தெரியாதே யென்றோர் சமாதானம் இதற்குக் கூறப்படலாம். உண்மையே. ஆனால், நம்பவில்லை யென்பதுமட்டு மெப்படித் தெரியும்? இரண்டுந் தெரியாதபோது நம்பியிரா னென்பதுபோல நம்பாதிரா னென்பது மெண்ணத் தக்கதே யன்றோ? மேலும், நிராயுதனைக் கொல்லலாகாது என்பது விதி. இதற்கு அவன் சரணாகதி யடைவானே. அதன்பொருட்டு அவ்வாறு செய்யப்பட்டது என் றோர் சமாதானம் கூறப்பட்ட தன்றோ? அவன் சரணாகதி யடைந்தால் இராக வருக் குண்டாம் நஷ்டமென்ன? அவ்வாறவன் செய்யின் மெத்த நன்மையே யன்றோ? இரு சகோதரரையும் ஒன்றுபடுத்தி யிருக்கலாமே. அதனாற் குறை வென்ன?

சொன்ன சொல் தவறா திருத்தற் பொருட்டு அவ்வாறு செய்யப்பட்டது எனின்: ஒருவனுயிரைக் காப்பதினிமித்தம் சொல் தவறுவதாயினும் உலகம் பழியாதே. "புரை தீர்ந்த நன்மை பயக்குமெனின் பொய்ம்மையும் வாய்மை யிடத்தா" மன்றோ? "நன்மை பயத்தலாவது, கேடாதல் சாக்காடாதல் எய்த நின்றதோருயிர் அச் சொற்களின் பொய்ம்மையானே அதனி னீங்கி இன்புறு தல்" என்றார் அரும்பொருள் கண்ட பரிமேலழகரும். ஆகவே, மன்னுயிர் காத்து நல்வழிப் படுத்தலின் பொருட்டு சொற்றவறுதல் குற்றத்தின்பாற் படாதே. குற்றத்தின்பாற் படுமெனவே வைத்துக் கொள்வோம். இக்குற்றம் நீங்கினும், மறைந்து நின்று நிராயுதனைக் கொன்ற பழியேனும் தொடராமற் போகாதே. ஏதேனும் ஒரு பழியின் வாய்ப்படுதல் தீராது. ஒன்று கொலைப் பழி, மற்றொன்று சொற்பிழைப் பழி. இரண்டனுளொன்றை ஏற்றே தீரவேண் டும். ஆகவே, இரண்டனுள், தான் துன்பந் துய்க்க நேரினும் அதனைப் பொருட்படுத்தாது, பிறனுயிரைப் பேணலே பெரியோர் கண்ட வழக்காம். தவிர, வாலி சுக்கிரீவர்களாகிய சகோதர ரிருவரும் ஒற்றுமைப்பட்டு வாழ் வார்களாயின் சொன்ன சொல் தவறினதற்காகச் சுக்கிரீவன் இராமனைப் பழித்துக்கூறான். ஆகவே எவ்வாற்றா லாராயினும் மறைந்து நின்றது குற் றத்தின்பாற் படாமற் றப்புதற்குச் சிறிது மிடனின்று. (தொடரும்)

---

சுருதிக்காக அறிவை அகற்றுபவன் இரண்டின் ஒளியையும் அவிப்பவனா வான். அவன் செயல் கண்ணுக்கு எட்டா நட்சத்திரத்தை தூரதிருஷ்டிக் கண்ணாடி வழியாய்த் தெளிவாய்ப் பார்ப்பதற் கென்று கண்களை அவித்துக் கொண்டது போலாம்.




# பெண்ணின் கடமைகள்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

இதனை ஆராய்வதில் சோர்வுறுதிருத்தல் அவசியம். காலபேதத்தினால் எண்ணம் வேறு படுவதியல்பு. பண்டைக்காலத்தில் பெண் இனம் தலைக்கடமைகளாகக் கொண்டிருந்த பொறுப்புக்கள் அயலாரின் நாகரிகக் கலப்பினால் தற்காலம் இழிவுள்ளவைகளாகக் கருதத்தலைப்பட்டு ஒரு நூற்றாண்டுக்குக் கிட்டிவிட்டதென்று கூறலாம். இதற்கு உதாரணமாக வர கவியும் சிவாநுபூதிச் செல்வருமாகிய துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகள் அருளிச்செய்த பெரியநாயகி யம்மையின் விருத்தமொன்றில்

“உள்ளமென் மனையில் விருப்பொடு
வெறுப்பாம் உறுகுழி மேடுகள் நிரவி
ஒழிவிலா வாய்மை மெழுக்கினாற் பூசி
உயர்தருமனம் எனப்படுமோர்
பள்ளிமென் றவிசில் இருத்தி நின்பதியைப்
பழுதில்யான் எனப் படுநெல்லைப்
பழமலமாயைத் தவிடுமி போக்கிப்
பாகஞ்செய் தென்றருத்திடுவாய்”

என வருணிக்கப்பட்டிருக்கிறது.

இதன்பொருள், உள்ளமாகிய வீட்டில் இயல்பாகவுள்ள மேடுபள்ளங்களைச் சமப்படுத்தி, சத்தியம் என்னும் சாணங்கொண்டு மெழுகி, உயர் நிலையுடைய மனமாகிய ஆசனத்தில் பரசிவக்கடவுளாகிய நாயகனை எழுந்தருளச் செய்து, நான் என்னுடையது எனப்படும் முனைப்பாகிய நெல்லை அறிவென்னும் உலக்கையினாற் குத்தி, பழமலமாயைகளாகிற தவிட்டினையும் உமியினையும் வேறுபடுத்திப் போக்கி, மெய்யறிவாகிய அதாவது சத்துவகுணமாகும் அரிசியைக்கொண்டு அநுபவமாகிய இன்னடிசிலாகச் சமைத்து, அவரை உண்பிப்பது எந்நாளோ? என்று இரங்குகின்றார்.

தாமத குணத்தினாற் றகையப்பட்டுள்ள சீவர்கள் அழுக்கினால் மூடப்பட்ட கண்ணாடியைப் போலவும், புகையினாற் சூழப்பட்ட அனல் போலவும், தெளிவின்றிக் கட்டுண்டு கிடக்கும் சிறுமையை எல்லாம் வல்ல சிற்சத்தியே

முற்பட்டுப் போக்க உரியவனென்பதும் அம்மகா சக்தியின் அருள் நியதியின்றி ஆன்மாபாசநிவர்த்தி பெறுதலும் இயலாதென்பதும், இத்தொழிற்பாடு சிவசக்தியின் கடமை யென்பதும் தெளிந்த உண்மைகளே. ஆனால் ஆணும் அல்லாமல் பெண்ணும் அல்லாமல் அலியும் அல்லாமல் உலகுயிர்களில் ஊடுருவித் தோய்ந்தும் தோயாமலும் நின்று இயக்குவிக்கும் மனோவாக்கிலடங்காத ஓர் மாபெரும் சக்தியைப் பெண்மை வாசகத்தாற் பேசுவதே, பெண் ஆண் எனும் இருபெருங் கூறுகளும் இம்மைப் பயனைத் துய்த்தற்கு இன்றியமையாத உறுப்புக்களென்பதும் ஈண்டுச் சிந்திக்கத்தக்க தொன்றாம்.

இனி, பெண்கள் இல்லத்தைச் சமநிலையில் குளிர்ச்சியுறப் பரிசுத்தம் செய்வதும், பதியை யுபசரிப்பதும், நெல்லைக் குத்துவதும், உமியையும் தவிட்டினையும் பிரித்துப்போக்கி வாலிய அரிசி எடுப்பதும், அதனைப் பதங்கெடாமல் சமைப்பதும், அன்புடன் அனைவர்க்கும் ஊட்டுவதும் தமது சிறந்த கடமைகளாகக் கொண்டிருந்தனர் என்பதும் இவ்விருத்தத்தினாற் பெறப்படும் வெளிப்படையான கருத்துமாகும். கைக்குத்து அஞ்ஞான்று பெரிய மனிதர் என்று சொல்லப்படும் தகுதியாளர் வீட்டுப்பெண்டிர்களுக்கும் சாதாரண அபிப்பியாஸத்திலிருந்த தென்பதை இன்றும் மிக முதியார்பால் கேட்டுணாலாம். காலக்கிரமத்தில் அத்தொழில் வயிற்றுக்கு இல்லா வறியோர் தொழிலாய் எண்ணப்பட்டு விட்டது. அத்தொழில் கையாளப்பட்டு வந்த காலத்தில் நோயற்ற வாழ்வும் குறைவற்ற மகிழ்வும் சுகமான மகப்பேறும் நாட்டில் இடம்பெற்றுக் கலைஞானமும் தவயோகமும் தாண்டவமாடின.

இருபத்து நான்குமணி நேரமும் மூளைக்கே வேலை கொடுத்துவரும் தற்கால நாகரிகக்கல்வி கற்ற பட்டதாரிணிகள் இக்காலத்தில் பெருகி வருகின்றனர். இவர்கள் உடல்நலம் சிறிதுமின்றிப் பிணிக்கூடாகி ஆயுள் நீட்சியையும் இழக்க நேருகின்றது. உடல் உழைப்பு ஒன்றினாலேயே இரத்த ஓட்டம் பெருகி உள்ளுறுப்புக்களும் வெளியுறுப்புக்களும் உரம்பெற முடியும். சரீர வுழைப்பினால் மனதில் இன்பம் எழுவதியற்கை. மூளை யுழைப்பினால் கவலையும் துன்பமும் வெறுப்பும் விளைவது அநுபவம். இரண்டும் வேண்டற்பாலவைகளே. அவசியமான இரண்டில் ஒன்றைப் புறக்கணித்து முன்னேறுவதாகக் கனவுலகில் எண்ணி வசிக்கும் தற்கால நாகரிகமாதர்நிலை பெரிதும் பரிதபிக்கத் தக்கதே. உத்தியோக மோகமோ? பிராப்தமோ? உள்ள பெண்மணிகள்தான் மேலேகூறிய கடமைகளிலிருந்தும் வெகுதூரம் போனவர்கள் என்பதில்லை. மனைவாழ்வு நடத்தும் பெண்களும் கடமைப் பயிற்சிகளில் கவனம் செலுத்துவதில்லை. நெல்லைகுத்துவதோடு நில்லாமல் தவிடு உமிபோக்கும் பணியும் இக்கவியில் வற்புறுத்தப்படுகிறது. இக்கருத்து மிக மிகப் போற்றற்குரியதாகும். தற்காலம் உள்ள இல்லறத்தலைவிகளில் ஒருவர் கூட தவிடு உமிபோக்கவும், கற்கள் பிரிக்கவும் அநுகூலமான பயிற்சியை அறிந்தவர்களாக இருக்க மாட்டார்கள் என்பது திண்ணம். இதனைப்படிக்கும் சகோதரிகள் இக்கட்டுரையில் உண்மை யுண்டென்றே கொள்வர் என்பதென் உறுதி. மேல் வகுப்பினரென்று வழக்கிலிருந்து வரும் பிரிவினர்களில் ஆசாரம் என்ற காரணங்காட்டி அவலைத் தாங்களே இடிப்பதும் புடைப்பதும், கல் நீக்குவது முதலிய யாவும் கூலியாளர் உதவி நாடாமல் செய்துவரும் வழக்கம் இன்றும் பெரும்பாலும் நிலவி வருகின்றது. பிரதான நகரங்களில் இம்முறை மறையத் தலைப்பட்டு விடினும் வெளிநகரம் கிராமம் முதலிய இடங்களில் இந்நிகழ்ச்சி சாதாரணமாய் உயிர்பெற்றிருக்கின்ற தென்பதை மறுப்பதற்

கில்லை. உடல் உரம்பெருக வேண்டியே இத்தகைய கட்டுப்பாடு ஆதியில் ஏற்பட்டதோ? யாதோ? அறியோம். அங்ஙனம் அவ்வாறு ஒழுங்குமுறை வகுத்துக்கொண்ட நுண்ணறிவை நாம் போற்றக் கடமைப்பட்டிருக்கிறோம். இவ்வாறு போற்றுவதற்கு மாறாகப் பிந்தின வகுப்பினர்கள் தங்களைப் பகிஷ்கரிக்கும் ஓர் செருக்கினால் இப்படிச் செய்வதாகச் சிலகாலமாய்த் தூற்றவும் வாய் கூசுவதில்லை. எல்லா இதர வகுப்பினரிலும்கூட தெய்வத்திற்குப் பூசை போடுவதென்னும் கொள்கையும் அதற்கு வேண்டிய அரிசியைத் தாங்களே குத்திக்கொள்ளுதல் வேண்டும் என்னும் கட்டுப்பாடும் இருந்து வருகின்றது. இதன் காரணமும் சரீர உழைப்பிற்கு சந்தர்ப்பம் அளிக்க வேண்டுமென்பதே யென்று கொள்ளுவது அறிவுடைமை யாகும்.

முன்னேறிவரும் நிலையினின்று பின்னே செல்லும்படி சொல்வதாக இதனைப் படிப்போர் பெரும்பாலும் வெறுப்பர். ஆனால் எது முன் எது பின் என்பதை அநுபவந்தான் உணர்த்தும். சிவப்பிரகாசர் கூறிவிட்டால் அதனை ஏற்கவேண்டுமா? என்றும் வினா எழலாம். பழந்தவப் பயனைத் துய்க்க வேண்டி கருவிலேயே திருவுடையவராய்த் திகழும் பெரியார்களில் ஷை சுவாமிகளும் ஒருவர் என்பது சரிதம் உணர்ந்தோர்க்கு விளக்கம். பன்னிரண்டாண்டில் திருவருணகிரியை வலம்வரத் தொடங்கியதிலிருந்தே அவர் வாக்கிலிருந்து கவிமழை பொழிய ஆரம்பித்ததாகும். அன்னார் வாக்கிலிருந்து வெளிவரும் கருத்துக்கள் யாவும் உலகுய்யவேண்டிப் பராசக்தியின் பெருங் கருணையின் குறிப்புக்களென்றே அறிவுடையோர் போற்றுவர். தெய்வமணம் கலவாத தற்காலப் புலவர்கள் மிகுதியும் பாராட்டப்படவில்லையே என்று தற்கால இளம்புலவருட் சிலர் வருந்துகின்றனர். மகாத்மா காந்தியடிகளின் கருத்துக்களே வெற்றி பெறுகின்றதே எனப் பொருமுவோர் சிலர் நம்மிடையில் உளர். அதற்கே மேலே கண்ட உவமை பொருந்தும். தெய்வத் திருவருளில் மூழ்கி நிற்கும் பெரியார் வாக்குகளும் கருத்துக்களும் எப்போதும் வாடா மலர்போல் மலர்ந்தே விளங்கும். அந்நுட்பம் சிந்திக்கப்படுமேல் காரணம் விளங்கும். எனவே பண்டு தொட்டு வந்த அருங்கடமைகளை இன்னதென்றறியாத தற்கால யுவதிகள் அமைக்கும் உணவில் நெல்லையும் கல்லையும் நீக்குவது உண்பவர் நாவின் வேலை. இயந்திர தேவதை நாட்டில் இடம்பெற்ற நாளிலிருந்து வறுமையைக் கைக்கூலிக் குழைப்பதினால் சமாளிக்கும் நிலையினர்களும் கைத்தொழில் மறந்து, உடல்வன்மை யிழந்து, பட்டினியால் பரதபிக்கின்றனர். இப்பசிப்பிணி மன்னுயிரை வாட்டும் கொடுமையைக் கடவுள் திருவுளமே சகியாதன்றோ—காந்தியடிகளின் உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு உய்வழி கோலுகின்றார்.

நமது மாகாணத்தில் சுமார் 50-ஆண்டுகட்கு முன் நீதிபதியாயிருந்த ஒரு உத்தமர் தினமும் அதிகாலையில் ஏற்றம் இறைப்பதை ஒரு முக்கிய கடமையாக ஏற்றுவந்தனர் என்பதைப் பலரும் அறிவர். உடல் உரம் உழைப்பினாலேயே வளர்வதென்பதும், அதனைப் பெருக்குவதே பிரதானம் என்பதும் உட்கொள்ள வேண்டு மன்றித் தொழிலில் பெருமை சிறுமை என்று எண்ணுதல் மடமை. கௌரியை உரலை அலங்கரித்து அதன்மீது கலசம் வைத்துப் பூஜிப்பது ஒரு நோன்பாக இன்றும் சில மரபுகளில் நடந்து வருகிறது. முன்னோர்கள் கொண்ட முறையெல்லாம் அப்படியே கொள்ளவேண்டு மென்பதில்லை. நமக்கு நிலையான நன்மை தரும் கடமைகளைக் கைவிடாமலிருக்க வேண்டுவது அவசியமன்றோ? இரத்த நாம்புகள் முறுக்கேறி ஓட்டம் பெருகு

வதற்கு உரித்தல்லாத வகையில் பல விளையாட்டுகள் நாகரிகப் பெண்களால் விரும்பப்படுகின்றன. இப்போலி எண்ணம் தொலைய வேண்டும். மிகமிகத் தொன்மையான கிராமங்களிலெல்லாம் ஏழைப் பெண்கள் தற்காலம் வீட்டு உபயோகத்திற்காக வேண்டிய சில படிக்கணக்கான தானியங்களையும் தாங்களே குத்தி அரிசி காண்பதை விடுத்து இரண்டுமைல் தூரத்தில் உள்ளதாயினும் நெல்மிஷினை நாடி ஓடுகின்றனர். இதைவிடப் பரிதாபம் வேறில்லை. பகலெல்லாம் வெய்யிலிலும் சதுப்பு நிலங்களிலும் கரடுமுரடான புன்செய் நிலங்களிலும் வேலை செய்துவந்த பெண்களெல்லாம் நெல் அரைக்கும் மெஷினையும் தேடிச் செல்லத் தொடங்கிவிட்டனர் என்றால், நகரவாச நாரீமணிகளைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? நாட்டில் ராட்டினம் ஒன்று மறைந்து நாசத்தைப் பரவச் செய்தது ஒன்றல்ல கேடு. நெல்லரைக்கும் மெஷின்களும், மாவு அரைக்கும் இயந்திரங்களும் பாவி பெண்கள் தொழிலை மறக்கச் செய்துவிட்டன. உடல் உழைப்பின்றித் தற்காலப் பெண்கள் பிணிக் கட்டுகளாகி விட்டனர். கரண்டி யெடுக்கவும் கையில் வன்மை குன்றியது. சுவாமிகள் செய்யுளில் மெழுக்கிடுவதும் பெண்கள் கடமையாகக் காட்டுகிறார். அந்தோ? நகரங்களில் சாணத்தைப் பரிசிக்கவும் கூசும் பெண்களே மலிந்துவிட்டனரே. தவிர ஸ்டேள என்றழைக்கும் ஆங்கில அடுப்புகளால் எங்கும் ஸ்பிரிட் மண்ணெண்ணெய் உதவியால் தீயுண்டாக்கப்படுகின்றது. அவைகளில் ஆகார முதலானதும் தயாரிக்கப்படுகின்றன. உடல் உழைப்பும் இன்றி உணவமைப்பிலும் இம்முறை புகுத்தப்படுவதால் இத்தகையார் உண்பது நஞ்சேயன்றி வேறென்ன? இந்த ஆங்கில அடுப்புக்குச் சுத்தி யென்பது வஸ்திர சுத்திதான். தண்ணீர் தேவையில்லை. மெழுக்கிடுவதற்கு மண்ணடுப்பன்றோ தேவை. மண்ணையும் சாணத்தையும் அருவருக்கத் தக்க பொருள்களாக எண்ணப்பட்டுவரும்போது மெழுக்கிடுவதற்கு மார்க்கம் என்ன? சென்னையில் குழாய் ஜலத்தினைப்பிடித்து பணிப்பெண்கள் சாணம் சம்பந்தமில்லாமல் ஊற்றிக் கழுவுவதும் அதன்பேரில் பழஞ்சுவரின் சுண்ணும்புக்கட்டிகளைத் தூளாக்கிக் கோலம் இடுவதும் அதிர்ஷ்ட தேவதையையும் ஆசார தேவதையையும் அந்தமான் தீவுக்கு அனுப்பியதற்கு அடையாளமாகும். நம்நாடு சுதந்தரம் எய்தினும் மேலே சுட்டிய மெஷின்கள் எல்லாம் முற்றிலும் எடுபடவேண்டும். பெண்கள் அநாகரிகமான புதிய முறைகளைக் கைவிட்டு சுத்தமாகவும் ஆடம்பரமின்றியும் கடமைகளைக் கைக்கொள்ள வேண்டும்.

அஸ்ஸாம் நாட்டில் இன்னும் விவாகமாக வேண்டிய பெண்ணின் கையால் நூற்ற நூலை நெய்த ஆடையே மணமகனுக்களிப்பது வழக்கமாம். அம்முறை இந்நாட்டிலும் பரவுதல் வேண்டும்.

எந்திரம் என்னும் மாவரைக்கும் கருவிகள் தற்காலம் சபர்மதி, பார்டோலி ஆசிரமங்களில்தான் இருக்கின்றன என்பது மிகையாகாது. இந்தியாவிலுள்ள எல்லாப் பெண்களும் வீட்டு இயந்திரங்களாகிற உரல், அம்மி, எந்திரம் இவைகளை உவப்புடன் தொழுது முன்போல் ஏற்றுப் பெருமையுறுவார்களாக. அந்நியர் ஆள்வது ஆடவர்களை. அந்நிய மெஷின்கள் ஆள்வது பெண்கள் சமூகத்தினை. எந்த நாடும் பெண்களின் உரிமை கடமைகளை யிழக்கக் கூடாது. இழந்தால் நாடு பிறகு மீளாது. ஆண்கள் வழிதவறினால் திருந்துவது எளிது. பெண்கள் பிழைப்பின் உய்வில்லை—கட்டிடத்தின் மேல்வாரம் இலமானல் புதிதாக வேயலாம். அஸ்திவாரம் ஆடினல் வீழ்ச்சிதான். ஆகவே பெண்கள் கடமைகளை ஏற்பார்களாக—விழிப்பார்களாக.

# பத்திரிகை

(டர்பன், சரஸ்வதி சபைத்தலைவர்.
திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை அவர்கள்.)

மானிடர் தம் அறிவை வளர்த்துக் கொள்வதற்கு அமைந்துள்ள ஆதாரவுகள் பல. அவற்றுள் தலைசிறந்தவை கல்வியும் கேள்வியுமாம். கல்வி யென்பது, ஒருவன் நல்லாசிரியரை யடுத்து முறையே நன்னூல்களைக் கற்றலாகும். கேள்வி யென்பது வாய்ப்பறையாகவும், நாக்கடிப்பாகவும் சாற்றுவதொன்றைப் போற்றிக் கேட்பது. இவ்விரண்டனுள்ளும் கேள்வியே எவர்க்கும் நலம் பயப்பதாகும். இதனால், "செல்வத்துட்செல்வம் செவிச் செல்வம் அச்செல்வம் செல்வத்துள் எல்லாந் தலை" என்பர் பெரியோர்.

ஆயினும், அச்சுயந்திரத்தின் உதவி ஏற்பட்ட இக்காலத்தே, கல்வி கேள்வியாகிய அவற்றின் நலன்களைப் புத்தகங்களும், சஞ்சிகைகளும், பத்திரிகைகளும் வெளிப்போந்து பூர்த்தி செய்கின்றன. கேள்வியா லாகிய நலங்களை யெல்லாம் இக்காலத்துப் பத்திரிகைகளே பெரும்பாலும் பயப்பனவாகின்றன. பத்திரிகைகள் பலவகையாகக் கால அளவில் வெளிப்பட்டு அவ்வப்போது நிகழும் விஷயங்களை வெளிப்படுத்துகின்றன. அதனால் இலௌகிக சம்பந்தமாகப் பத்திரிகைகள் செய்யக்கூடிய சிறந்த நன்மைகள் வேறு எவ்விதமான சாதனங்களாலும் ஏற்படமாட்டா.

பத்திரிகைகள் அகநாடு புறநாடு முதலிய பற்பல நாட்டின் செய்திகளையும் அவ்வப்போதே வெளியிடுவனவாகையால், அவைசெய்யும் நன்மைகள் அவ்வப்போதே பயன் படுவனவாகும்.

நாம் நாகரிகம்பெற்ற பிற நாடுகளோடு உறவாடி, நாமும் நம்முடைய நாடும் உயர்ச்சியடைய வேண்டுமானால், நமது நாட்டில் தினப் பத்திரிகைகள் பல எழுந்து உலவி வரவேண்டும். எனவே, பலரும் பத்திரிகைகளைப் பெற்றுப் படித்து நலம்பெற வேண்டு மென்பதாம். இங்கிலாந்து முதலிய நாடுகளில், மணிதோறும் பத்திரிகைகள் வெளிவருகின்றன என்பதைக் கேட்க நம்மவரில் பலர் ஆச்சரியமும் ஐயமுங் கொள்ளுவர். ஜப்பான் முதலிய தேசங்களில் கைவண்டி இழுப்பவர்களுங்கூட நாள்தோறும் பத்திரிகைகள் வாங்கிப்படித்து நலம்பெறுகின்றனர். சமீபகாலத்தில் சீர்திருத்தம்பெற்ற

---

இன்பம் எல்லாம் துன்பவிலை கொடுத்தே வாங்கவேண்டும். மெய் யின்பத்திற்கும் பொய்யின்பத்திற்கும் உள்ள வித்தியாசம் இதுவே—மெய்யின்பத்திற்கு விலை அதை அனுபவிக்கு முன் கொடுக்கப்படும். பொய்யின்பத்திற்கு விலை அதை அனுபவித்த பின் கொடுக்கப்படும்.

ஜப்பான் தேசத்தில் படிக்கத் தெரியாதவர்கள் நூற்றுக்குப் பத்துப் பேரானால் தொன்று தொட்டு நாகரிகம்பெற்று விளங்கிவரும் நமது நாட்டில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் நூற்றுக்கு ஏறக்குறைய பத்துப்பேரே யாகின்றனர். அந்தோ! இக்குறை எக்காலத்தோ நிறைவுறுவது! கல்வியின் நிலை இந்நிலையி லிருந்தால் புத்தகங்களும் பத்திரிகைகளும் எழுந்து உலவுவது எந்தக் காலமோ? இது நிற்க, எழுதப் படிக்கத்தெரிந்த சிலராயினும் பாஷாபிமான மும், தேசாபிமானமுங்கொண்டு பத்திரிகைகளை வாங்கிப் படித்து ஆதரிப்பா ராயின், இக்காலத்தே உண்டாயிருக்கும் சீர்திருத்தக் கொள்கைகள் முன் னுக்கு வரவும், அதனை மேற்கொள்ள முயலும் மானிடர் முன்னேற்றமடைய வும் வழியுண்டாகும். இந்த வகையில் பலவித நன்மைகளைச் செய்ய நாடித் தோன்றிய ஆனந்தபோதினியாம் நம் அருமைப் பத்திரிகைக்கு 16 ஆண்டு கள் கடந்துவிட்டன. சென்ற ஈராண்டுகளாக வாரப் பத்திரிகையும் தோன்றி மக்களுக்கு நன்மைசெய்து வருகின்றது. இனியும் எம் சகோதரர்கள் பெரி தும் ஆதரவு அளித்து வருவார்களானால், விரைவில் "ஆனந்தபோதினி" தினப் பதிப்பாக வெளிவருவதைக்கண்டு ஆநந்திக்கலாம். அங்ஙனம் ஆக எல்லாம்வல்ல இறைவன் அருள் பாலிப்பானாக.

## ஜீவிய சந்தாதார்



ஈரோடு உயர்திருவாளர் மு. முத்தியாலு குப்பு சாமி செட்டியாரவர்கள் நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகைக்கு இவ்வாண்டு முதல் ஜீவிய சந்தா தாராகச் சேர்ந்திருக்கிறார்கள். அவர்கட்கு எமது மன மார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகின் றோம். உயர்திரு. செட்டியாரவர்கள் எல்லாச் செல் வமும் பெற்று இனிது வாழுமாறு எல்லாம்வல்ல இறை வனை இறைஞ்சுகின்றோம். பத்திராதிபர்.

---

நகைப்பில் எவ்வளவு அடங்கியிருக்கின்றது! மக்கள் அனைவருடைய மனத்தையும் திறந்து அறிவதற்கேற்ற பொதுச் சாவி அதுவே. நகைக்க முடி யாதவன் துரோகம் தந்திரம் திருட்டு செய்யத் தகுந்தவன். இப்பொழுதே அவனுடைய வாழ்வு முழுதுவதும் ஒரு துரோகம், ஒரு சூழ்ச்சி.

# ஓர் ஐய வினு.

"ஆனந்தபோதினி" பத்திராதிபர் அவர்களுக்கு,

ஐயா,

பிரசோற்பத்தி ஆவணி மாதச் சஞ்சிகையில் "புலவர்களைப்பற்றிய பொய்ம்மைகள்" என்பதைப் பீடிகையாகக்கொண்டு திருவானைக்கா T. S. குழந்தைவேலன் என்பவர் எழுதியதில் பாண்டியன் மகள் புகழேந்தியைச் சிறைச்சாலையில் போடுவித்ததைக் கேள்வியுற்று அதனுல் சினங்கொண்டு அரசன் பள்ளியறைக்கு வரும்போது கதவை மூடித் தாழிட்டுக்கொண்டு இருந்தாள் என்றும், அரசன் ஒட்டக்கூத்தரை அழைத்து அவள் ஊடலைத் தீர்க்கும்படி கேட்டுக்கொண்டதினுல் அவர் "இழையொன்றிரண்டு" என்று துவங்கி 'பொறுப்பதன்றோ கடன் பேதையர்க்கே' எனும் பாடலைப்பாடி முடித்ததாகவும், அதனுல் அவள் அதிகச் சினங்கொண்டு ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத்தாழ் என்றபடி பின்னும் தாழ்போட்டுக் கொண்டாள் என்றும், அதன்பின் அரசன் புகழேந்தியை அழைத்து அவள் ஊடலைத் தீர்க்கும்படி கேட்க அவா "நானேயினி உன்னை"யென்று அடியெடுத்து "கைத்தலமாகிய தாமரையே" எனும் பாடலைப்பாடி முடிக்க அரசன் மனைவி சினந்தீர்ந்து கதவைத் திறந்தாள் என்றும் எழுதியிருக்கிறார். ஆனுல் நளவெண்பாவில் புகழேந்திப்புலவர் சரித்திரத்தில் இரண்டாவது செய்யுளை ஒட்டக்கூத்தர் பாடியதாகவும் முதலாவது செய்யுளை புகழேந்தி கூறியதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. அச் செய்யுட்களில் எது இனிமையானதும் மனதைக் கசியச் செய்வதும் என்பது நமது நண்பருக்குப் புலப்படவில்லை போலும்! இது நிற்க "பொறுப்பதன்றோ கடன் பேதையர்க்கே" என்றதை எந்நூலில் இருந்து எடுத்தார்? ஆனுல் நளவெண்பாவிலும் விநோதரசமஞ்சரியிலும் "பிழையொன்றிரண்டு பொறாராகுடியில் பிறந்தவரோ" என்றல்லவா இருக்கிறது? எதுசரி?

இங்ஙனம்
ஓர் சந்தேகி.

---

## ஐய வினுவுக்கு விடை.

மேற்கண்ட கடிதம் "ஆனந்தபோதினி" ஆசிரியரவர்களால் எனக்கு அனுப்பப்பட்டது கண்டு மகிழ்ந்தேன். "புலவர்களைப்பற்றிய பொய்ம்மைகள்" என்ற கட்டுரை, ஒட்டக்கூத்தர், புகழேந்தி முதலிய புலவர்களின வரலாறுகளில் பொய்யும், வழுவும், புனைந்துரைகளும் மலிந்துள்ளன, அவற்றைச் சிக்கறுத்துக் களைந்து செம்மைப்படுத்த வேண்டுமென்ற நன்னோக்கத்துடனேயே எழுதப்பட்ட தென்பதை நண்பர் உணர்ந்திருப்பாரென நம்புகிறேன்.

---

உண்மையைக் காண அறிவை அழிக்கச் சொல்லுதல் பகலொளியைக் காண கண்களை அவித்துக்கொள்ளச் சொல்லுதல் போலாம். அறிவை அழிக்கச் சொல்வது சமயத்தின் சூழ்ச்சியன்று; மூட நம்பிக்கையினதே.

நிற்க- "இழையொன்றிரண்டு" என்ற பாடலும், "நானே யினியுன்னை" என்ற பாடலும் முன்பின்னாக மாறறிச் சொல்லப்பட்டுள்ளன என்பது நண்பர் கருத்து. மாற்றிக்கூறும் நூலகளு முண்டென்பதை நானே கூறியுள்ளேன். கட்டுரையிற் காண்க. திவான்பகதூர் வி. கிருஷ்ணமாச்சாரியா ரவர்கள் வரைந்துள்ள "பன்னிருபுலவர் சரித்திரம்" என்ற நூலிலுள்ளவாறு அவ்விரண்டு பாடல்களும் அமைக்கப்பட்டன—அது ஆராய்ச்சியாற் போந்த நூலாகலின். அந்நூலில் சோழன் மனைவி "ஒட்டக்கூத்தரே, உமது குலத்தொழிலுக்கேற்ப 'இழை' யென்றெடுத்தீர் போலும்!" எனச் சினந்ததாய்க் காட்டப்பட்டுள்ளதையும் நண்பர் நோக்குவது நலம்.

'இழையொன்றிரண்டு' என்ற பாடலே இனிமையுடையது; அதுகேட்ட சோழன் மனைவி சினந்தணிந்திருக்க வேண்டுமென்னும் எனது கருத்து, கட்டுரையில் இனிது விளங்கிக் கிடக்கவும், நண்பர் அவசரங்கொண்டு வரைந்தமைக்கு இரங்குகிறேன். ஒட்டக்கூத்தர் இனியபாடல் பாடலாகா தென்பது நண்பர் எண்ணம் போலும்!

பாடபேதங்கள் பலவுண்டென்பதையுங் காட்டியுள்ளேன். அவற்றில் எது சரி எது தப்பு என்பதை ஆராய்ந்தறிவது அறிஞர்கடன். நண்பர்போன்ற நல்லறிஞர்கள் இவ்வழியில் நுழைந்து உண்மைகாண முயன்று, புலவர்களைப் பற்றியவும், அவர் தம் பாடல்களைப்பற்றியவுமான சில்லரைச் செய்திகளையும், வழுக்களையுங் களைந்து நேர்மை செய்வாராயின் அன்னோரைத் தமிழகங் கொண்டாடும்.

இங்ஙனம்,
தி. சி. குழந்தைவேலன்.

# "வெள்ளைத் தெய்வங்கள்"



ராவ்பகதூர்-திவான்பகதூர்கள்
வெள்ளைத் துரைகளை வரவேற்குங் காட்சி.

# அழிப்பான் கதைத் திரட்டு.

(பி. என். சுப்பனுச்சாரி.)

1 தட்டினுல் ஓடிவரும் தாசியுமில்லை, தணலிலே வெந்துருகு மீயமுமில்லை; குட்டிகளைத் தூக்கிவரும் ஓநாயுமில்லை; குளக்கரையில் நீர்குடிக்கும் குதிரையுமில்லை.

2 பிறந்தன்றைக்கே நடந்து, பிள்ளைச்சலங்கையும் கட்டாமல், தாய்ப் பாலும் குடியாமல், தண்ணீர் குடித்தே வளருகிறது.

3 நீரருகுபூக்கும் நிலம்படாரக்காயாது வண்டுமுகம் பாராது மலருமில்லை.

4 நிலத்தில் முளையாது நீண்டகொடி வீசாது காய்க்காது பூக்காது கனி யோடு சாப்பிடலாம்.

5 குளம் வட்டக் குளம், கொக்கு நீண்ட கொக்கு, குளம் வற்றிப் போச்சு, கொக்கும் வற்றிப்போச்சு.

6 ஏறினுல் வழுக்கும், இலை சுருளும், காய் துவர்க்கும், பழம் இனிக்கும்.

7 ஓலைப்பூ நிறத்தாள், ஒரு அடி வளர்ந்தாள், கோட்டையேறிப் பார்த்தாள், குத்துப்பட்டுச் செத்தாள்.

8 கங்கை நதியாடி, கடலாடிக் கரையேறிக் கதிரோனைக் கண்டவுடன் உயி ரும் சோர்ந்து, பொங்குகடல் சீனிகொண்டு இரதமேறிப், பூலோகம் திரிந் தலையும் அயனுமில்லை, செங்கருடன் பறந்தடிக்கு மாலுமில்லை, மங்கையர் மணம்புரிய மலருமில்லை, மார்த்தாண்ட னிக்கதைக்கு வகை சொல்வாயே.

9 காலால் தண்ணீர் குடிக்கும் கம்பங்கோழி, கழுத்தால் முட்டையிடும் கம் பங் கோழி.

10 சன்னல் பின்னல் கொடி, சாதிலிங்கக் கொடி, எண்ணெயில்லாக்கொடி, என்ன கொடி?

11 காரோடிய கருமணலில் கட்டி மாம்பழம் பொத்தென்று விழுந்தது. கண் டவர் இரண்டுபேர். எடுத்தவர் பத்துபேர். ருசிபார்த்தவன் ஒருவன். தின்றவர் முப்பத்திரண்டு பேர்.

12 கிண்ணிபோல் பூ பூக்கும்; கிடாரம்போல் காய் காய்க்கும்.

13 காலையில் நாலுகால் கடும்பகலில் இரண்டுகால் மாலையில் மூன்றுகால் மதி யுள்ளோர் மதியுங்கள்.

14 வண்ணான் வெளுக்காத வெள்ளை, குயவன் பண்ணாத பாண்டம், மழை பெய்யாத தண்ணீர்.

15 ஆழக் குழிதோண்டி அதிலொரு முட்டையிட்டு அண்ணாந்து பார்த்தால் தொண்ணூறு முட்டை.

---

வழிபறித் துண்ணு மிதிதொழில் புரியேல்.

# இவற்றுள் தங்கள் மீசை உண்டா ?



1. பன்னாடை மீசை:—கள்ளுக்குடிக்க நல்லது. வண்டல் வாய்க்குள் போகாமல் தடுக்கும்.

2. ஜன்னல் மீசை:—காற்றோட்டத்திற்கு நல்லது.

3. கதாயுத மீசை:—சண்டைக்கு உதவும்.

4. ஈ ஒட்டி மீசை:—நாகரிகர்க்கு நனி விருப்பம்.

5. எழுத்தாணி மீசை:—ஓலை எழுதலாம்.

6. கயிற்று மீசை:—திருவாரூர் தேர் இழுக்கலாம்.

7. சிங்கப்பல் மீசை:—வேட்டைக்கு நல்லது.

8. ஸ்க்ரூ மீசை:—பாட்டல் திறக்க ஸ்க்ரூ தேடவேண்டியதில்லை.

9. கொக்கி மீசை:—கொடுக்காப்புளி பறிக்க உதவும்.

10. சாமியார் மீசை:—பேயோட்ட நல்லது.

11. முள்ளு மீசை:—முத்தங் கொடுக்க நல்லது.

12. கெய்சர் மீசை:—உலகங் கிடுகிடுக்கும்.

13. மோழை மீசை:—ஆசாரம் அதிகம்.

## சாது வணக்கம்




இவர் மெய்ச் சாமியாரா? பொய்ச் சாமியாரா? உருவத்தையும், முகத்தையும், ஆசீர்வதிக்கும் கையையும் நோக்கி நீங்களே தீர்மானித்துக்கொள்ளுங்கள்.

---

இயற்கை யழகே நயத்தையளிக்கும்.

# யார் தாழ்த்தப்பட்டவர் பிரதிநிதி?

(ஸ்ரீஜத். மஹாதேவ தேசாய்.)

இக்கடிதம் இந்தியா வந்து சேருமுன் சிறுபான்மை யோருடன் நடத்திய பேச்சுவார்த்தை முறிந்து போய்விட்டதென்று சிறுபான்மைக் கமிட்டியில் மகாத்மா அறிவித்துவிட்ட செய்தி இந்தியாவுக்கு எட்டியிருக்கும். இது இவ்விதம் தானிருக்கப் போகிறதென்பது காந்திஜிக்குத் தெரியும். இந்திய நண்பர்கள் கூட்டத்தில் ஒரு நாள் முன்னால் மகாத்மா காந்தி பேசுகையில் 'இந்தியாவுக்காகவும் அதன் கக்ஷிக்காகவும் பிரார்த்தனை செய்யுங்கள். மனுஷ்ய யத்தனம் சம்பந்தப்பட்டவரையில் என்னுடைய முயற்சி பலன்தராது போலிருக்கிறது. நான் தாங்கிக்கொள்ள முடியாத பளு என்மீது சுமத்தப்பட்டிருக்கிறது. இது பெரிய வேலை. இதன் முடிவை மேற்கொண்டு செய்யக்கூடியதும் இராது; பலனுமிராது. ஆயினும் அக்கரையில்லை. மனப்பூர்வமாகச் செய்யப்பட்ட எந்த முயற்சியும் வீண்போனதில்லை' என்று சொன்னார். சிறுபான்மைக்கமிட்டி கூட்டத்தில் இதையே அவர் ராஜீய பாஷையில் சொன்னார். கசப்பு மருந்துக் கோப்பை அநேகமாக நிரம்பியிருந்தது. அதில் பாக்கியிருந்ததை நிரப்புவதுபோல் சில பிரதிநிதிகள் பேசினார்கள்; பிரதமமந்திரியும் அதைத் தாங்கிப் பேசினார். கவர்ன்மெண்டால் நியமிக்கப்பட்டவர்கள் அதைக் கூறுவதை ஆட்சேபித்தாலும், அவர்கள் யாருடைய பிரதிநிதிகளாகத் தாங்கள் இருந்து வருவதாக பாத்தியங்கொண்டாடிக் கொள்ளுகிறார்களோ அந்த ஜனங்களும் மகாத்மாகாந்தி சொன்னதை ஆட்சேபிக்க முடியாது. "இந்தியப் பிரதிநிதி கோஷ்டியின் அமைப்பே தோல்வியை ஏற்படுத்தக் கூடியதாக இருந்தது. நாங்கள் யாருடைய பிரதிநிதிகளென்று கருதப்படுகிறதோ அவர்களால் நாங்கள் தெரிந்தெடுக்கப்படவில்லை. கவர்ன்மெண்டால் நியமிக்கப்பட்டு நாங்கள் இங்கு வந்திருக்கிறோம். சமரஸ முடிவு ஏற்படுவதற்கு யார் இங்கிருப்பது உபயோகமாக இருக்குமோ அவர்களும் இங்கில்லை. மேலும், சிறுபான்மையோர் கமிட்டியை கூட்டுவதற்கு இது காலமுமில்லை. எங்களுக்குக் கிடைக்கப்போவது என்னவென்று தெரியாத நிலைமையில் இக்கமிட்டியைக் கூட்டியிருப்பது அர்த்தமற்றதாக இருக்கிறது. நாங்கள் விரும்புவது கிடைக்கப் போகிறதென்று தெரிந்தால், பாபகரமான போராட்டத்தால் அதைத்திரஸ்கரிக்கு முன் ஒரு முறைக்கு ஐம்பது முறை அதைப்பற்றி யோசிப்போம்" என்று சொன்னார்.

இவ்விதம் காந்திஜீ சொல்லியதை ஆட்சேபிக்க முன் வந்தவர்கள் இதன் உண்மையையே மெய்ப்பித்தார்கள். ஸர் முகம்மது ஷாபியும், டாக்டர் அம்பேத்காருஞ் சொல்லியதுபோல் கவர்ன்மெண்டால் நியமிக்கப்படாத எவர்

---

மல்லனேயாயினும் வல்லமை பேசேல்.

தான் பேச முடியும்? "இந்தியாவின் எதிர்கால க்ஷேமம் பிரிட்டிஷ் சமராஜ்யத்தையே பொறுத்ததாக இருக்கிறதென்று நம்பும் நாங்கள் வெளிப்பெயர் வழிகளுடைய மத்திரஸ்தத்தை ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை. அந்த சமராஜ்யத்தின் தலைவர்களான பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் தான் இந்த விஷயத்தைத் தீர்த்துவைப்பதற்கு யோக்கியதை யுடையவர்கள். அவர்கள் ஜட்ஜுகளாக இருந்து முடிவு செய்வது எங்களுக்கு சர்வ சம்மதம்" என்று ஷாபி சொன்னார். "பிரிட்டிஷாரிடத்திலிருந்து இந்தியரிடத்தில் உடனே அதிகாரத்தை மாற்றிவிட வேண்டுமென்று தாழ்ந்த வகுப்பினர் விரும்பவில்லை; அவ்விதம் செய்யவேண்டுமென்று அவர்கள் கேட்கவில்லை; அதற்காக எவ்வித இயக்கத்தையும் அவர்கள் ஆரம்பிக்கவில்லை" என்று டாக்டர் அம்பேத்கார் சொன்னார். சுயாட்சி கவர்ன்மெண்டைக் காட்டிலும் பிரிட்டிஷார் தாழ்ந்த வகுப்பினருடைய உரிமைகளைக் காப்பாற்றுவதில் அதிக சிரத்தையுடையவர்களாக இருப்பார்களென்று அவர் நினைக்கிறார். இவ்விதம் பேசக்கூடிய நண்பர்கள் இருந்த நிலைமையில் பிரதம மந்திரியின் வேலை இலகுவானதாகிவிட்டது. அவருடைய பிரசங்கத்தைக் கேட்டபோது அப்பத்திற்காகச் சண்டை போட்டுக் கொண்டிருந்த இரண்டு பூனைகளிடையே மத்தியஸ்தம் செய்துவைக்கவந்த குரங்கின் கதை ஞாபகத்திற்குவந்தது. அவருடைய பேச்சின் தொனியும், சில சில வார்த்தைகளை அவர் அழுத்திச் சொன்னதும் "யோக்கியப் பொறுப்புடன்" என்ற வார்த்தையையும் "என்னை நம்புங்கள்" என்ற வார்த்தையையும் அவர் அழுத்திச் சொன்னதும் அவருடைய கக்ஷியைக் கவிழ்த்து விடுபவைகளாக இருந்தன. "உங்களுடைய வேலைகளை நீங்களே ஒப்புக்கொள்ளுங்கள் என்று கவர்ன்மெண்டின் சார்பாக நான் சொல்லுவதாகவும் பார்லிமெண்டு அதை ஒப்புக் கொள்ளுவதாகவும் வைத்துக் கொள்ளுவோம். முட்டுக்கட்டையின்றி ஆறு அங்குலதத்திற்கு அதிகமாக நீங்கள் நகர முடியுமா" என்றார். இவ்விதம் எப்பொழுதாயினும் மனப் பூர்வமாகச் சொல்லப்பட் டிருக்கிறதா? மேலும் அவர் பெருமையாக "கவர்ன்மெண்டார் தங்களுடைய பிரேரணைகளைச் சொல்லிவிட்டால் அவைகளே முடிவானவைகளாக இருக்கும்" என்று கூறினார்.

ஆனால் அதைரியப்படுவதற்கு இடமில்லை. எதற்கும் தயாராக இருக்கிறவருக்கு எதுவும் அக்கரையில்லை. அதனாலேயே சில நண்பர்கள் ஆத்திரப்பட்டுக்கொண்டும், சிலர் வருத்தப்பட்டுக்கொண்டும் காந்திஜீயைக் காணவந்தபொழுது "எல்லாம் நன்மைக்கே. பிரிந்து போகவேண்டிய கட்டத்திற்கு வந்து கொண்டிருக்கிறோம். நம்முடைய பிரச்சினை படிப்படியாகத் தெளிவடைந்து வருகிறது. டாக்டர் அம்பேத்காரிடம் ஆத்திரப்படுவதோ அல்லது அவர் கூறுவதில் ஆயாசப்படுவதோ சாத்தியமில்லை. நாம் செய்துள்ள பாவம் நமக்குத் தெரியவில்லை. ஹிந்து சமூகத்தினர் செய்துள்ள பாவமே உருவெடுத்தாற்போன்று அவருடைய பிரசங்கம் இருந்தது" என்றார். இந்தத் தகராறுகள் எல்லாம் தீர்ந்து, நடந்துபோன சம்பவங்களை நிஷ்பக்ஷபாதமாக ஜனங்கள் பரிசீலனை செய்யக்கூடிய நிலைமை ஏற்படுகையில் "சட்டசபைப் பிரதிநிதித்துவத்தைக் காட்டிலும், மத சமூக ஹிம்சைகளிலிருந்து அவர்களைக் காப்பாற்றவேண்டியதே அவசியமானது. சட்டத்தைக் காட்டிலும் அதிக செல்வாக்குள்ளதாக இருக்கும் வழக்கங்கள் அவர்களைக் கேவல ஸ்தி

---

திக்குக் கொண்டுவந்து விட்டன. அதில் ஒவ்வொரு ஹிந்துவும் அவமான மடைந்து, தகுந்த பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டும். ஆகவே மேல் ஜாதியினரென்று சொல்லிக்கொள்ளுவோரால் சமூகத் துறையில் செய்யப் படும் ஹிம்ஸைகள் குற்றமானவை யென்று நான் கடுமையான சட்டத்தை இயற்றிவைப்பேன். கடவுள் கிருபையால் ஹிந்துக்களுடைய மனச்சாக்ஷி உணர்வுபெற்று வருகிறது. தீண்டாமை யென்பது பழையகதை யாகிவிடும்" என்று பேசியவரே அந்தச் சமூகத்தின் பிரதிநிதியாக இருக்கத் தகுந்தவ ரென் பதை ஒப்புக்கொள்ளுவார்கள். (எங் இந்தியா)

## சீமையில் காந்தியடிகளின் தினசரி

மகாத்மாவின் காரியதரிசியான ஸ்ரீ. மகாதேவதேசாய் மகாத்மா சர்வ கட்சி மகாநாட்டில் கலந்து கொள்ளும் நேரம்போக மீதி நேரங்களில் தின சரி எப்படிக் காலங் கழிக்கிறார் என்பதைப்பற்றி ஏதோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் அவர் செய்த அலுவல்களை விவரித்துக் காட்டித் தினசரியும் அவ் வாறே ஓய்வின்றி வேலை செய்து வருவதாக அறிவிக்கிறார். அக் குறிப் பிட்ட தினத்தில் மகாத்மா செய்த வேலைகளாவன:—

கிங்ஸ்லி மண்டபத்திற்கு இரவு ஒரு மணிக்கு வந்து சேர்ந்தார். 1-45-க்கு தினமானம் நூற்கவேண்டிய அளவு நூல் நூற்று முடித்தார். 1-50-க்கு செய்த வேலைகளின் விவரத்தை குறிப்புப் புத்தகத்தில் எழுதினார். 2-மணி முதல் 3-45-வரை தூங்கினார். 3-45 முதல் 5-மணிவரை அவர் பல்தேய்த்து முகம் கழுவி பிரார்த்தனை செய்தார். 5-மணி முதல் 6-மணிவரை சற்று தூங்கினார். 6-முதல் 7-வரை நடந்து சென்றார். நடந்து செல்கையிலேயே ஒருவருக்குப் பேட்டி கொடுத்துப் பேசினார். 7-மணி முதல் 8-மணிவரை காலையில் கவனிக்க வேண்டிய வேலைகளைக் கவனித்துவிட்டு குளித்தார். 8-மணி முதல் 8-30 வரை முதல் சாப்பாடு. 8-30 மணிக்குமேல் கிங்ஸ்லி மண்டபதிலிருந்து நைட் பிரிட்ஜிக்குச் சென்றார். 9-15 முதல் 10-45 வரை பத்திரிகை நிருபர்களுக்கும் சீக்கிய அங்கத்தினர்களுக்கும் வியாபாரி களுக்கும் பேட்டி அளித்துப் பேசினார். 10-45 மணிக்குமேல் செண்ட்ஜேம்ஸ் மாளிகைக்குச் சென்றார். அங்கு 11-முதல் 1-மணிவரை யிருந்தார். 1-மணி முதல் 2-45 வரை அமெரிக்கர் விருந்தில் இருந்தார். 3-மணி முதல் 5-30 மணிவரை முஸல்மான்களோடு சம்பாஷித்தார். 5-30 முதல் 7-வரை இந்தியா மந்திரியோடு சம்பாஷித்தார். 7-முதல் 7-30 வரை வீட்டுக்கு அவ சரமாகச் சென்று பிரார்த்தனை செய்து மாலைச் சாப்பாட்டை முடித்துக் கொண்டார். 8-முதல் 9-வரை மதவிலக்குக் கோஷ்டியினருடன் கலந்து பேசி இந்தியாவில் மதுக்குடி விஷயமிருக்கும் நிலைமையை எடுத்துச் சொன் னார். 9-மணிக்கு மேல் 10-மணிவரை போபால் நவாபைக் கண்டு பேச அவர் 'சிட்கப்' என்ற மாளிகைக்குப் புறப்பட்டார். அவர் கிங்ஸ்லி மண்ட பத்துக்கு எப்போது திரும்புவாரோ தெரியாது. ஒரு மணிக்கு முன் னம் திரும்புவார் என்று சொல்வதற்கில்லை.



---

நடன மாதருட னுறவாடேல்.

# தேவதாசி முறை

காங்கிரஸ் தலைவர்களுக்கும் இதர தலைவர்களுக்கும் டாக்டர். எஸ். முத்துலட்சுமி ரெட்டி அம்மையார் பின்வரும் விஞ்ஞாபனத்தை வெளியிட்டிருக்கிறார்:—

பிரபல தேசாபிமானியும், மதுவை ஒழிக்க இடைவிடாமல் உழைத்து வருபவருமான ஸ்ரீமான். ஸி. ராஜகோபாலாச்சாரியார் தென்னை மரங்களைக் கள்ளுக்கு விடவேண்டாமென்று ஸ்ரீபார்த்தசாரதி, கபாலேச்வரர் கோயில்களின் தர்மகர்த்தாக்களுக்குச் சமீபத்தில் ஒரு வேண்டுகோள் வெளியிட்டிருக்கிறார். மதுவிலக்குக்காகவும் தேசவிடுதலைக்காகவும் அவர் செய்துவரும் ஊழியத்தை நான் நன்றியுடன் பாராட்டுகிறேன். மேற்குறித்த கோயில்களிலும், ஸ்ரீ ஏகாம்பரேசுவரர் கந்தஸ்வாமி கோயில் முதலிய வேறு பலவற்றிலும் நிகழ்ந்து வருகிற இன்னும் கொடியதான ஒரு வழக்கத்தைப்பற்றி ஸ்ரீமான். ராஜகோபாலாச்சாரியார் கவனஞ் செலுத்தும்படி வேண்டுகிறேன். இக்கோயில்களில் தேவதாஸிகள் என்போர் இன்னும் தொண்டுபுரிய அனுமதிக்கப்படுகிறார்கள். தர்மகர்த்தாக்கள், குருக்கள் முதலியோரின் பூரண சம்மதம் பெற்றுச் சிறு பெண்களுக்கு இன்னும் பொட்டுக் கட்டப்பட்டு வருவதாகத் தெரிகிறது. பெரிய கோயில்களைப் பின்பற்றிச் சின்ன கோயிலார்களும் குருட்டுத்தனமாக நடக்கிறார்கள்.

கள்ளுக்கு மரம் விடுவது எவ்வளவு பாபமோ அதைப்போல் சிறு பெண்களை விபசாரத்தில் அழைப்பதும் பாபமல்லவா? மதத்தின் பெயராலும் கடவுள் பெயராலும்-படித்த பட்டதாரிகள் பெருத்த இச் சென்னைமா நகரில் இம்மாதிரி காரியங்கள் நடப்பதைச் சும்மா பார்த்திருப்பதா? காஞ்சிபுரம், திருக்கழுக்குன்றம், தஞ்சாவூர், மதுரை, கும்பகோணம் முதலிய பெரிய யாத்திரை ஸ்தலங்களிலும், பணக்காரர் கோயில்களிலும் பல குடும்பங்கள் பஹிரங்கமாகவும் தங்கள் பெண்களைத் தேவதாஸிகளாக்கி விபசாரத்தில் ஈடுபடச் செய்வதைக் காண்கிறோம். ஜன சமூகம் இதை இன்னும் சகித்துக்கொண் டிருக்கிறது. 18-வயதுக்குக் கீழ்ப்பட்ட பெண்களுக்குப் பொட்டுக் கட்டினால் காவலும் அபராத தண்டனையும் உண்டென்று தெரிந்தும், தர்மகர்த்தாக்கள் குருக்கள் முதலியோர் அதை யனுமதிக்கிறார்கள். ஆயிரக்கணக்கான யாத்ரீகர்கள் கடவுள் தரிசனத்திற்காகச் செல்லும் கோயில்கள் பலவற்றில் இன்றைக்கும் இந்த தேவதாஸிக் கூட்டங்கள் அழகிய உடைதரித்து சதிர் பண்ணுகிறார்கள். ஊர்வலத்துடன் போகிறார்கள்.

எத்தனையோ ஸ்திரீகள் கூட்டங்களும் மகாநாடுகளும் சீர்திருத்தச் சங்கங்களும் இந்த மகாபாதகச் செயலை ஒழித்துப் போடும்படி மகாஜனங்களுக்கு வற்புறுத்தியாகிவிட்டது; மகாத்மா காந்திகூட இங்கு வந்திருந்தபோது அதைக் கண்டித்திருக்கிறார். மத ஸ்தாபன சட்டத்திற்கு ஒரு திருத்தம் செய்யப்பட்டு, தேவதாஸிகளை ஆலயத் தொண்டிலிருந்து நிவர்த்திக்கக் கலெக்டர்களுக்கும் தர்மகர்த்தாக்களுக்கும் அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. "ஆலயத் தொண்டிலிருந்து எங்களை நிவர்த்தியுங்கள். எங்கள் குழந்தைகளின் மானத்தைக் காப்பாற்றுங்கள்" என்று பல தேவதாஸிகள் மன்றாடியும் கோயில் தர்மகர்த்தாக்கள் தடைகல்லா யிருப்பதாக எம்மிடம் புகார்கள் வந்திருக்கின்றன.

மதுபானத்தைவிட இந்த துன்மார்க்கமான விபசாரத்தினல் ஜனசமூகம் எவ்வளவு நாசமாகின்றது என்பதைப் பாமரர்கள்தான் அறியாதிருக்கிறார்களென்றால், பெரும்பாலான நமது தலைவர்களும் போதிய அளவு அறிந்திருக்கவில்லை. விபசாரம் இல்லாத தேசமில்லை. வெகு காலமாக அது இருந்து வருகிறது; என்றாலும் விபசாரத்தை அங்கீகாரம்பெற்ற ஒரு தனித்தொழிலாக எந்த ஜனசமூகமும் கொண்டாடவில்லை. மகா பாதகத்தொழிலில் அறியாப் பெண்களை எந்த நாகரிக சமூகமும் ஈடுபடுத்தாது. அதை அநுமதிக்கவும் செய்யாது.

பொட்டுக் கட்டப்பட்ட பெண்களின் கதி என்ன? அவள் 'தேவதாஸி' யாகிறாள். பொல்லாத நோய்களுக்கு அவள் களஞ்சியமாகிறாள். சனசமூகத்துக்கு வேறென்ன ஆபத்து வேண்டும்? ஒரு புருஷனோடு நின்ற தேவதாசிகளின் காலம் மறைந்து வருவது வெளிப்படை.

எனவே இந்தத் தீங்கை ஜன சமூகத்திலிருந்து தூரத்தப் பொதுஜன ஒத்துழைப்பு அவசியமானது. ஸத்தியம், அஹிம்ஸை இவைகளை விடுத்துக் கேவலம் சரீர இன்பத்தை நாடுவதை காந்திஜியும் அழுத்தமாய்க் கண்டித்திருக்கிறார். ஆகையால் நமது நகரங்களிலும் பட்டினங்களிலும் யாத்திரை ஸ்தலங்களிலும் தேவாலயங்களை யடுத்தும், நடக்கிற இக்கொடிய விபசாரத்தைத் தடுப்பதில் காங்கிரஸ் சிறிது கவனம் செலுத்தலாகாதா? நமது தேவாலயங்களில் தேவதாசிமுறை இருந்துவரும் வரையில் ஸ்திரீ குழந்தைகள் துன்மார்க்கத்தில் பிரவர்த்திக்கச் செய்வதைத் தடுக்கும் சட்டம் நிஷ்பிரயோஜனமாகும். பல சமஸ்தானங்கள் நொடிப்பொழுதில் இந்த தேவதாசி முறையைச் சமீபத்தில் ஒழித்துவிட்டன. நமது மதராஸில் மட்டும் தேவதாஸிகள் தொண்டு ஓயவில்லை. ஹிந்து மதஸ்தாபன சட்டமும் சென்னையை விலக்கி யிருக்கின்றது. இந்த அழகிய பட்டினத்தைப் புனிதமாக்குவதில் காங்கிரஸ் தலைவர்களும் அல்லாதாரும், ஆலய டிரஸ்டிகளும் ஈடுபடும்படி நான் மிகவும் வேண்டிக்கொள்ளுகிறேன். பட்டினம் ஒழுங்குபட்டால் சின்ன ஊர்கள் இலகுவில் சரிப்பட்டுவிடும்.

## தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் பதில்.

தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ. சி. ராஜகோபாலாசாரியார் அவ்வம்மையாருக்குப் பின்வருமாறு பதில் எழுதியுள்ளார்:—கோயில் தென்னை மரங்களை கள்ளுக்கு விடவேண்டாமென்று தர்மகர்த்தாக்களிடம் பலமுறை கேட்டுக்கொண்டிருக்கிறேன், ஆனால் அந்த வேண்டுகோள் பயன்பட்டதா என்பது வேறு விஷயம். தங்களையும் என்னையும் போன்றவர்கள் ஓயாமல் சொல்லிக்கொண்டிருக்க வேண்டியதுதான். இவ்வாறே தீண்டாதாரென்போருக்கும் கோயிலுக்குள் சுவாமி தரிசனம் செய்ய இடங்கொடுக்க வேண்டுமென்று தமிழ்நாட்டிலுள்ள பல பெரிய கோயில்களின் தர்மகர்த்தாக்களுக்கும் வேண்டுகோள் அனுப்பினேன். அவ்வேண்டுகோளும் பயன்படவில்லை. பொட்டுக்கட்டும் வழக்கத்தை நான் முற்றிலும் வெறுக்கிறேன். இவ்வழக்கம் ஆதியில் வாழ்நாள் முழுதும் கன்னிகையாயிருந்து கடவுள் பணி செய்யும் நோக்கத்துடன் ஏற்பட்டது. ஆனால் அனுஷ்டானத்தில் அது சீர்கெட்டுவிட்டது. இப்போது தேவதாசிகள் என்றால் விபசாரிகள் என்றே ஏற்பட்டிருக்கிறது. இது நமது நாட்டுக்கே பெரிய அவமானம். அவ்வழக்கத்தை யொழிக்க வேண்டியது இன்றியமையாதது. கிளர்ச்சி நடத்தி அவ்வழக்கத்தை ஒழியுங்கள். அந்த ஆற்றல் தங்களுக்கு உண்டு. தங்கள் ஊழியத்தை நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன்.

# ஓர் மறுப்பு.

(ஸ்ரீவைகுண்டம்—வி. அனந்தகிருஷ்ணன், பி. ஏ.,)

சென்ற இதழில் திரு. பாஸ்கரத் தொண்டைமான் பீ. ஏ. அவர்கள் 'கேகயர் கோமகள் இழைத்த கைதவம்' என்ற தலைப்பின்கீழ் வரைந்திருந்த வியாசத்தைக் கண்ணுற்ற நண்பர்கள் அதை மறந்திருக்கமாட்டார்கள் என்று நம்புகிறேன். அதில் நண்பர், கைகேயியையும் அவள் உள்ளக் கருத்தையும் பற்றிக் கம்பர் கொண்ட அபிப்பிராயத்தை ஆராய முயன்று 'என்னே! கேகயர் கோமகள் இழைத்த பேரறம்! இதுவோ கைதவம்!' என்று கூறியுள்ளார்.

மேற்குறித்த முடிவுரையை யடைய முயற்சித்த மனப்பான்மையை நாம் போற்றாமல் இருக்கமுடியாது. ஆனால், விஷயங்கள் இவ்வளவு இலகுவாக பொருள்படுகின்றனவா என்பதுதான் கேள்வி. நண்பர் கூறிய காரணங்களில் முதலாவது:—அயோத்திநகர் கைகேயியின் பொருட்டு கன்யாசுல்கமாகக் கொடுக்கப்பட்டது. ஆகையால் எவ்விதத்திலும் அந்த நாடு, தயரதனுக்குப் பிற்காலம் பரதனுக்கும் அவன் வாரிசுக்கும் இல்லையேல் யுதாஜித்துக்கும் உரிமையானது. எவ்விதத்தும் இராமனுக்கு அது பாத்தியமில்லை' எனபது. கன்யாசுல்கம் என்ற வழக்கறம் நம்மிடை முன்னம் இருந்ததாகவே வைத்துக் கொள்வோம். அயோத்தி அரசு, மேற்குறித்த உரிமையின் மூலம் கைகேயிக்கும் அவள் வாரிசுக்குமே உரியது. அதனால் தயரதனுக்கு உரிமையில்லை. இருக்கட்டும். கைகேயின் உடல், பொருள், ஆவி ஆகிய அனைத்துமே தயரதன் வயமிருக்க, ஓர் சிறு நாடோ மன்னனுக்கு உரிமையில்லை? கணவனைக் கடவுளெனக் கருதும் கற்புடைக் கயல் விழியாள் கைகேயியோ இச்சிறு வுடமையைத் தன் காதற் கிழவனுக்குத் தாமறுப்பள்? தயரதன் அறியா நீதியோ? சுமந்திரர் முதலானவர்களும், தேவரிஷிகளும் அறியா நீதியுமுளதோ? தயரதர் நீதியினின்றும் தவறினர்; ஆறிஞர் அமைச்சர் பெருமான் நீதிநெறி பிறழ்ந்தார் என்று புகலுவதும் நீதியோ? அது அநீதியாக விருந்திருக்கும் பக்ஷத்தில் அன்றே சுமந்திரர் எடுத்துச் சொல்லியிருப்பார். மறந்துவிட்டிருப்பினும், பின்னுவது கைகேயியின் செயலால் தவறுதலை யுணர்ந்து, அவள் செய்கையை யாமோதித்திருப்பர்.

கைகேயி, தனது உள்ளக் கிடக்கையை வெளியிட்டால் தயரதனுக்கு அபகீர்த்தி விளையும் என்று நினைத்து வாளாவிருந்தாள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனல் அவள் தன் உட்கருத்தை வெளியிடாமல் இருந்தது தான் தயரதனுககு அபகீர்த்தியை விளைவித்தது. ஏனெனில், கைகேயியின் சித்தாந்தப் பிரகாரம், தயரதன் ஓர் அநீதியான செய்கை (இராமன் முடிசூடல்) ஈடேறாமல் போனதற்காக வருந்தி உயிர் நீத்தார். இது பரீக்ஷையில் தேராத வாலிபர்கள் தற்கொலை செய்துகொள்வது போன்றுள்ளது. என்னே தயரதர் மடமை! இந்தக் கீர்த்தியை கைகேயி தன் கணவனுக்குச் சம்பாதித்து வைததாள்! அவள் மட்டும் தயரதனிடம் தன் அகக்கருத்தை யுணர்த்தியிருப்பின், பேருவகை யெய்தி 'பலே!' யென்று அவள் முதுகைத் தட்டிக் கொடுத்து, அவள் நுண்ணறிவுக்காக அவளை மெச்சிக் கொண்டாடியிருப்பர்.

கடமைப்பட்டவருக்கு நீதியோதலும், தவறுற்ற காலத்து தவறை யுணர்ந்து திருத்திக்கொள்வதும் ஓர் பிழையாகுமா? அதெற்கெதிராக, அதுவோர் புகழல்லவோ? ஆனல் நமது கைகேயி அரசன் ஆவியகன்றாலும் சரி, தன் உள்ளக் கருத்தை வெளியிடமாட்டேன் என்று சாதிக்கிறாள். ஆதலின் தயாதன் மரணத்திற்கும் அவள் உள்ளக்கருத்தை வெளியிடாமலிருந்ததே காரணம். ஏனெனில்: தயாதன் தன் தவறுதலை யுணர்ந்திருப்பின், மனமலர்ச்சியுடன் கைகேயின் செயலை யேற்றுக்கொண்டு உயிர் நீப்பதை யொழிப்பாரல்லவா?

நிற்க, கைகேயியின் உள்ளக் கருத்துக் கிணங்க, பரதன் அயோத்தி யாசுக்கே உரியவன். கோசல நாட்டிற்குச் சற்றும் அவன் அருகனில்லையல்லவா? அப்படியிருக்க கைகேயி—அறக்கோயில்—பரதனுக்கு ஏக சக்ராதிபத்தியம் விரும்புவது நீதியா? அல்லது ஈரேழு வருடங்கள் கழிந்த பின்னர் மட்டும் பரதனுக்கு உரிமைபோய் இராமனுக்கு வந்துவிடுகிறது போலும்! பரதனைப் பார்த்து இராஜ்யத்தை இராமனிடம் ஒப்புவிக்கலாம் என்று வாதாடலாம். அதற்கு இலக்கான பேர்வழி இராமனல்லன். அதற்கு இப்பொழுதைய வல்லரசுகளில் எதையாவது தான் பார்க்கவேண்டும். துரும்பாயினும் தனக்கு பாத்தியமில்லாவிடின், சத்திய சந்தனுகிய இராமன் ஏற்றுக்கொள்வானு? ஏழைப் பிராமணனு தானம் வாங்கிக்கொள்ள? இராமனைக் காட்டிற்கு விரட்டியதற்கு கைகேயியின் சார்பாக வேறெக்காரணமும் சொல்ல வொண்ணுது.

இயற்கையில் கைகேயி மிகவும் நல்லவள் என்பதை யாரும் மறுக்கமுடியாது. மந்தரையின் மொழிகளால் மனம் திரிந்து பொறாமைக்கு இலக்காக இன்னல் பல இழைக்க முயன்றாள். நண்பர், "இதுவரைக்கும் மனம் வேறுபடாத கைகேயி, இப்பொழுது மட்டும் மாறுபாடடைவானேன்" என்கிறார். அதற்கு நாம் கூறுவதெல்லாம் அடுத்தடுத்து ஒரு விஷயத்தை இடித்திடித்துக் கூறும்பொழுது, கொஞ்சமாவது மனிதன் மனம் வேறுபடும் என்பது அனுபவசித்தம். எறும்பூரக் கற்குழியுமல்லவா? இறுதியில் எல்லாம் இனிது நிறைவேறுகின்றபடியால் நாம் கைகேயியின் மேல் ஆயாசப்படுவதற்கில்லை. கடைசியாக ஒரு பாட்டிற்கு அநேகவிதமாய்ப் பொருள் கூறலாம். ஆயினும் சந்தர்ப்பங்களுக்கு எது பொருந்துகிறதோ அதுவே உண்மையான பொருள்.

இந்தப் பாட்டில் கம்பனின் கவிநயம் எதிலிருக்கிற தென்றால், கைகேசியின் புன் செயலின் கொடுமையை, பின்னம் நன்மை விளைவினால் சமனம் செய்வதுபோன்று, வேறு பொருள் தொனிக்கும்படியாகச் செய்தும் குறைக்கிறார். ஆதலின் நண்பர் கூறிய பொருள் இதற்கே உபயோகப்படும். அதை உண்மையான பொருளாகக் கொள்ளுதல் கூடாது.

## அழிப்பான் கதைத் திரட்டின் விடை.

1. சட்டிபானை. 2. கோழிக்குஞ்சு. 3. உப்பு. 4. தேன் கூடு. 5. விளக்கில் எண்ணெயும் திரியும். 6. வாழை மரம். 7. நெற்பயிர். 8. கடல் மீன். 9. கத்தரிச் செடி. 10. பாம்பு 11. இரண்டு கண், பத்து விரல், நாக்கு, பற்கள். 12 பூஷணிக்காய். 13. சிறு குழந்தை, வாலிபம், வயோதிகம். 14. தேங்காய். 15. பனம்பழம்.




# நீல அறையின் மர்மம்.

(எஸ். எஸ். வாஸன்)

## 1-வது அத்தியாயம்

### என்னுடைய கலியாணம்

என் பெயர் லோகநாதன். எனக்கு இருபத்தைந்து வயதாகின்றது. என் பெற்றோர் தம்மிடமுள்ள சொத்து அனைத்தையும் செலவு செய்து என்னை உயர் கலாசாலையில் படிக்க வைத்தார்கள். எனது இருபதாம் ஆண்டில் நான் டாக்டர் வேலைக்குப் படிக்கப்புகுந்தேன். இதில் என் பெற்றோர்களுக்குக் கொஞ்சமும் இஷ்டமில்லை. தற்காலத்தில் டாக்டர்கள் மலிந்து கிடக்கிறார்களென்றும் இதனால் டாக்டர்களுக்கு வருமானம் குறைந்து போகின்றதென்றும் வாதாடி என் பெற்றோர்கள் என் மனதைத் திருப்ப முயன்றார்கள். ஆனால் என் ஊக்கமெல்லாம் ஒரு டாக்டராக இருக்க வேண்டும் என்னும் உறுதியான எண்ணத்தையே பின்பற்றியது. தப்ப முடியாத ஆபத்துக்கள் டாக்டர்களுக்கே விசேஷமாய் நேரிடுமென்று என்தந்தை அடிக்கடி உதாரணங்கொண்டு எடுத்துக்கூற ஆரம்பித்தார். "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்ற கொள்கையை இதுவரையில் நான் கடைப்பிடித்து ஒழுகி வந்தேன். ஆனால் இந்தச் சந்தர்ப்பத்தில் அவர் பேச்சைக் கேளாது அவரையும் சமாதானப்படுத்திக்கொண்டு டாக்டர் பரீட்சைக்குப் படிக்க ஆரம்பித்தேன். தற்சமயம் நான் பரீட்சையில் தேரி இரண்டு வருஷங்களும் ஆகிவிட்டன. அந்தோ! என்னை அநாதையாக விட்டுவிட்டு என் தாய் தந்தையரும் சிலமாதங்களுக்கு முன் பரலோகஞ் சென்றுவிட்டார்கள்.

சென்னைபட்டினத்தில் கையில் ஒற்றைக்காசு மில்லாமல் நான் விடப்பட்டேன். வயிற்றை நிரப்ப வேலைபார்த்தே ஆகவேண்டிய நிலைமை வந்துவிட்டது. எங்கேயாவது சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் வேலை கிடைத்தாற் போதுமென்று பல விடங்களில் மனுக்கொடுத்துப் பார்த்தேன். என் அதிர்ஷ்டம், எங்கும் வேலை கிடைக்கவில்லை. இந்த நிலைமையில் என்ன செய்வதென்றே தெரியாமல் இரண்டுமாதகாலம் நான் தவித்திருந்தேன்.

பிறகு, ஒருநாள் சைனக்கடை வீதியில் ஜகந்நாதன் என்னும் என் நண்பனொருவனைச் சந்திக்கும்படி நேரிட்டது. என்னைக்கண்டதும் ஜகந்நாத

---

தன்னுயிரொன்ப மன்னுயிராகும்.

னுக்கு உண்டான சந்தோஷத்திற் களவேயில்லை. ஜகந்நாதனும் என்னைப் போல் டாக்டர் பரீக்ஷையில் தேரினவனுனாலும் அவன் சொந்தமாக ஒரு மருந்து ஷாப் வைத்துக்கொண்டு பிரத்தியேகமாக டாக்டர் வேலை பார்த்துக் கொண்டு வருகிறான்...என்னைக் கண்டவுடன் ஜகந்நாதன் "அடடா லோக நாதா!...நீ தானா!" என்று மிகுந்த ஆச்சரியத்துடன் கேட்டான். அவனிவ்வாறு ஆச்சரியப்பட்டதன் காரணம் எனக்கு நன்றாய்த் தெரியும்' உண்மையில் நான் மிகுந்த ஏழ்மையான ஸ்திதியிலேயே காணப்பட்டேன். அவன் கேட்டதற்கு "ஆம். ஜகந்நாதா! நீ எங்கிருக்கிறாய்? உன்னைப் பார்த்து வெகு நாட்களாயினவே?" என்று பதிலுரைத்தேன். "நான் லிங்கச்செட்டித் தெருவிலிருக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டு என்னையும் தன்னுடன் கட்டாயப்படுத்தி யழைத்துக்கொண்டு தானிருந்த விடத்திற்குச் சென்றான்.

வெகு நாட்களாய்த் தான் பிறந்த ஊருக்குப் போய்ச் சில நாட்களிருந்துவிட்டு வரவேண்டுமென் றிருக்கிறதாகவும் நான் அவனிடத்திலேயே யிருந்துகொண்டு அவனைத்தேடிவரும் நோயாளிகளுக்கு மருந்து கொடுக்க ஒப்புக்கொள்ளும் பட்சத்தில் அன்றையதினமே தான் சென்னையை விட்டுப் போக இஷ்டப்படுகிறதாகவும் ஜகந்நாதன் என்னிடம் கூறினான்...நான் சமயமறிந்து சரியெனப் பதிலுரைக்க அவன் தன்னிடத்தில் என்னை வைத்து விட்டுத் தனது கிராமத்திற்குப் போய்விட்டான். இடம் புதிதானாலும் வேலை புதிதல்ல; ஆகவே சந்தோஷத்துடன் நான் ஜகந்நாதனுடைய மருந்து ஷாப்பிலேயே தங்கி விட்டேன்.

இரண்டு நாட்களுக்கு அங்கு யாதொரு விசேஷமும் நடைபெறவில்லை. மூன்றாம்நாள் சாயந்திரம் ஒரு அதியாச்சரியமான சமாசாரம் நடைபெற்றது.

மருந்து ஷாப்புக்கு எதிராக ஒரு ரிக்ஷா அதிவேகமாய் வந்து நிற்க, அதினின்றும் இறங்கிய கறுப்பு நிறமுடைய ஒரு ஸ்திரீ வேகமாக உள்ளே நுழைந்து "ஐயா! நீங்கள்தான் டாக்டர் ஜகந்நாதன் என்பவரோ?" என்று கேட்டாள். இதற்கு நான் "டாக்டர் ஜகந்நாதன் வெளியூருக்குப் போயிருக்கிறார். அவருக்குப் பதிலாக நானிருக்கிறேன். என்ன விசேஷம்?" என்று விசாரித்து விட்டு அவளை யுட்காரும்படிச் சொன்னேன். உடனே அவள் "ஐயோ! எனக்கு உட்காருவதற்கு நேரமில்லை. என் எஜமானியம்மாள் படுத்த படுக்கையாக இந்த நிமிஷமோ அடுத்த நிமிஷமோ என்றிருக்கிறார்கள். நீங்கள் உடனே என்னுடன் வரவேண்டும். தயவுசெய்து சீக்கிரம் வாருங்கள்!" என்று பரபரப்புடன் சொல்ல, நான் அவளைப் பார்த்து, "உன் எஜமானி யம்மாளுக்கு என்னவிதமான அசௌகரியம்?" என்று வெகு நிதானமாகக் கேட்டேன். "ஐயா! எனக்கு அதெல்லாம் தெரியாது. தாமதம் செய்யாமல் என் பின்னே சீக்கிரம் வாருங்கள்" என்று அதிகமான பரபரப்புடன் அந்த ஸ்திரீ சொல்லவே, நான் விரைவாக மருந்துப் பெட்டியை யெடுத்துக்கொண்டு அவள் பின்னே சென்று அவளுடன் வாயிலில் காத்துக்கொண்டிருந்த ரிக்ஷாவி லேறிக்கொண்டேன். ரிக்ஷா அதிவேகமாய்ப் பல சந்துகளில் நுழைந்து போய்க்கொண்டிருந்தது.

வழியில் அந்த ஸ்திரீயைப் பார்த்து அவளுடைய எஜமானிக்கு என்ன விதமான நோய் ஏற்பட் டிருக்கிறதென்று பலதடவைகளில் கேட்டும், அவள்

---

இணக்கமிலாரோ டிணக்கஞ் செய்யேல்.

சரியான விடை பகராது சும்மா யிருந்துவிட்டாள். ஒன்று, இவள் அசட்டுத் தனமாகப் பதில் கூறும விருக்கவேண்டும், அல்லது இவளை யனுப்பியவர்கள், டாக்டர் ஏதாவது கேட்டால் பதில் சொல்லாதே என்று கட்டளையிட்டிருக்க வேண்டும் என்று நான் தீர்மானித்துக் கொண்டேன்.

சுமார் இருபது நிமிஷங்கள் நான் ரிக்ஷாவில் சென்றிருப்பேன். கடைசியாக ஒரு பெரிய வீட்டின் வாயிலில் அதுபோய் நின்றது. நானும் என்னை யழைத்துக்கொண்டு சென்ற ஸ்திரீயும் கீழிறங்கினோம். உடனே அந்த ஸ்திரீ வீட்டிற்குள் நுழைந்து செல்ல நானும் பின்தொடர்ந்து வேகமாகச் சென்றேன். அந்தச் சமயத்தில் கீழேயிருந்த ஒரு வேலைக்காரன் "இதோ இந்த அறைக்குள் சென்று உட்காருங்கள். எஜமானரை ஒரு நொடியில் வரச் சொல்லுகிறேன்." என்று கூறிக்கொண்டு இடதுபக்க மிருந்த ஒரு சிறிய அறையைச் சுட்டிக் காண்பித்தான். நான் அங்குபோய் உட்கார்ந்த பிறகு அவன் தன் எஜமானரைக் கூப்பிடச் சென்றான். இரண்டு நிமிஷங்களுக் கெல்லாம் சுமார் ஐம்பது வயது உள்ள ஒரு மனிதர் நானிருந்த அறைக்குள் நுழைந்து என்னைப்பார்த்து "நான் கூப்பிட்டு அனுப்பியதை யலட்சியம் செய்யாமல் தாங்கள் உடனே வந்ததற்கு மனமார வந்தன மளிக்கிறேன்" என்று சிரித்துக்கொண்டே சொல்ல, அவர் பேசிய தன்மையிலிருந்து அவரே அவ் வீட்டி னெஜமானரென வறிந்துகொண்டு "நீங்க ளனுப்பிய ஸ்திரீ எனக்கு உடனே வரவேண்டு மென்பதாகச் சொன்னாள்......என்னாலாக வேண்டிய உதவி யென்ன? செய்யத் தயாரா யிருக்கிறேன்" என்று விடை பகர்ந்தேன்.

உடனே அம்மனிதர் என்னருகில்வந்து ஒரு நாற்காலியி லமர்ந்தபடியால் என்னுடன் எதைப்பற்றியோ பேச விரும்புகிறார் என்று எனக்குத் தோன்றியது. நோயாளியைக் காண்பிக்காமல் இம்மனிதர் என்னோடு பேச விரும்புவது எனக்கு ஒருவித ஆச்சரியமாகவே யிருந்தது......அருகில் வந்து உட்கார்ந்தவுடன் அவர் என்னைப்பார்த்து "ஐயா! தங்கள் பெயர் எனக்குத் தெரியவில்லை. தயவு செய்து சொல்லலாகாதா?" என, 'என் பெயர் லோகநாதன்" என்று நான் பதில் சொன்னேன். உடனே அவர் "ஐயா! டாக்டரவர்களே! உங்களோடு சில வார்த்தைகள் பேசவேண்டியே உங்களை யழைப்பித்தேனே யல்லாது சாதாரணமாக ஒரு டாகடரின் உதவியை ஜனங்கள் எதற்குத் தேடுவார்களோ அதற்காக நான் அழைக்கவில்லை" என்றார். இதைக்கேட்டதும் நான் ஆச்சரியத்துடன் அவசரமாக "ஆனால் நான்வந்த காரியம்? நோய்பட்ட ஸ்திரீயைப் பார்த்த பிறகு நாம் பேசக் கூடாதா?" என்றேன்.

அம்மனிதர்:—இல்லை. முன்னாலேயே நாமிருவரும் ஒருவரை யொருவர் அறிந்துகொள்ள வேண்டிய தவசியம்!—என்று கூறிவிட்டுச் சும்மா யிருந்தார்.

உடனே நான் அவரது முகத்தை யொருமுறை உற்றுப்பார்த்தேன். என்னை யங்கு அழைத்துக் கொண்டுபோன ஸ்திரீயோ தன் எஜமானியம்மாள் உயிர் நிலை பெற்றிருப்பது சந்தேகமென்று தெரிவித்தாள். இந்த மனிதரின் முகத்திலோ அவ்விதமான அச்சம் ஒன்றும் காணப்படவில்லை......இந்த மனிதர் யார்? இதுவே என் மனதில் ஒரு பெருத்த சந்தேகத்தை உண்டுபண்ணி

---

டம்பஞ் செய்து துன்பங் கொள்ளேல்.

யது. உடனே நான் அவரைப் பார்த்து "ஆனால் நோயாளி இப்பொழுது சௌக்கியமடைந்திருக்க வேண்டுமென்று நினைக்கிறேன்" என்றேன்.

அம்மனிதர்:—கொஞ்சம் சௌக்கியமா யிருக்கிறது. இருந்தாலும் உயிர் பெற்றெழுந்திருப்பா ளென்று எனக்குத் தோன்றவில்லை—என்று சொல்லி விட்டுச் சிறிதுநேரம் மௌனமா யிருந்த பின்னர் "டாக்டரவர்களே! நான் சொல்லப்போவதற்கு நீங்கள் உடன்படுவீர்களோ மாட்டீர்களோ எனக்குத் தெரியவில்லை!......என்னுடைய உறுதியான எண்ணம் என்னவென்றால் இவ்வுலகத்தில் எந்தத் தொழிலுடையவனும் லாபத்தை யுத்தேசித்து எந்தக் காரியத்தையும் செய்யத் தயாரா யிருப்பான்!" என்றார். இவர் என்ன சொல்லுகிறாரென்றே யெனக்குப் புரியாமலிருந்தபடியால் நான் அவரைப் பார்த்து "நீங்கள் சொல்லுவது எனக்கு விளங்கவில்லையே!" என்றேன்

"நான் என்ன சொல்லுகிறேனென்றால் இவ்வுலகத்தில் எப்பேர்ப்பட்ட மனிதனும் தனக்கு வேண்டிய திரவியம் கிடைக்கும் பட்சத்தில் பிறருக்கு எந்த வழியிலும் உதவி செய்யத் தயாராயிருப்பான்; அல்லவா?" என்று கூறி விட்டு அப் பெரிய மனிதர் என்னையே உற்றுப் பார்த்தார். அவர் சொல்லியதைக் கேட்டதும் என்னை யறியாமலே எனக்குச் சிரிப்பு உண்டாக நான் அவரைப் பார்த்து "நீங்கள் கூறுவது உண்மைதான். ஆனால் எல்லோருமே திரவியத்திற் காசைப்படுவார்களா?" என, உடனே அவர் என்னைக் கூர்ந்து பார்த்து "அப்படி ஆசைப்படாத மனிதர்களில் நீங்கள் ஒருவரோ?" என்று வினவினார்.

நான் சற்றுத் தயங்கினேன். அவர் கேட்ட கேள்வி எனக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. இம்மாதிரியான கேள்விகளை யவர் கேட்கும் காரணம் எனக்குப் புலப்படவில்லை......இரண்டொரு நிமிஷத்திற்கு நான் மௌனமா யிருக்க அவர் என்னைப் பார்த்து "டாக்டரவர்களே! ஒரு சிறிய கேள்வி முதலில் கேட்டுக் கொள்கிறேன். பிறரிடமிருந்து திரவிய ஒத்தாசை வேண்டாமல் நீங்கள் அவ்வளவு ஆஸ்தியுடைய செல்வவந்தர்தாமோ?" என்றார். உடனே உண்மையைக்கூற நினைத்து "இல்லை; நான் அதிகமான ஆஸ்தியாவது அல்லது வரும்படியாவது உடையவனல்ல?" என்றேன்.

"எனக்காக ஒரு காரியத்தை முடித்துத் தருவதன் பொருட்டு நான் உங்களுக்குக் கைம்மாறாக திரவியங் கொடுத்தால் நீங்கள் வாங்கிக் கொள்வீர்களல்லவா?" என்று அவசரத்துடன் கேட்டார் அப் பெரியவர்.

"நீங்கள் என்ன திரவியங் கொடுத்தாலும் எனக்கிஷ்டமில்லாத காரியத்தை நான் செய்யமாட்டேன்" என்று வெகு நிதானமாகவும் ஸ்பஷ்டமாகவும் பதில் கூறினேன்.

இதைக் கேட்டதும் சிறிது நேரம் யோசித்திருந்துவிட்டு அம்மனிதர் "நல்லது; இன்னும் நன்றாகப் புரியம்படிச் சொல்லுகிறேன். உங்களுக்கு நான் ஐந்து லக்கத்தில் பணம் தருவதாயிருந்தால் அதை வேண்டாமென்று நீங்கள் சொல்லுவீர்களோ?" என்று கேட்டுவிட்டு என் முகத்தையே விறைத்துப் பார்த்தார். "ஐந்து லக்கத்தில் பணமா! நீங்கள் என்ன சொல்லு

---

ஞமலி போனன்றி யமைகுத லரிது.

கிறீர்களென்று எனக்குத் தெரியவில்லையே?'' என்று திகைப்புடன் அவரைக் கேட்டேன்.

"ஐந்து லக்கத்தில் பணம் என்றால் 10,000-ரூபாய்கள் என்று அர்த்தம் !'' என்று கூறிவிட்டு அவர் சும்மாயிருக்க நான் அச்சப்பட்டவனும் ஆச்சரியங் கொண்டவனும் "10,000 ரூபாய் எதற்காக?'' என்று கேட்டேன்.

ஆ ! அடுத்த நிமிஷம் ஒரு பயங்கரமான எண்ணம் என் மனதில் குடிகொண்டுவிட்டது. கொலை செய்வது டாக்டர்களுக்குத்தான் சுலபமான காரியம் ! ஆகவே பணத்தை யெனக்குக் கொடுப்பதாகச் சொல்லி அம் மனிதர் யாரையோ கொலை செய்யும்படிக் கேட்கப்போகிறாரென்ற அதிபயங்கரமான எண்ணம் எனக்கு உண்டாயிற்று. அப்பொழுது உச்சி முதல் உள்ளங்கால் வரையில் என் தேகம் நடுங்கிற்று. சில நிமிஷங்கள் நான் பேசாமல் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிக்கொண்டிருந்தேன்.

அந்தச் சமயத்தில் அம்மனிதர் என்னைப் பார்த்து "நீர் எனக்காகச் செய்ய வேண்டிய வேலை மிகச்சுலபமான வேலைதான். அதில் உங்களுக்கு அதிகமான கஷ்டமுண்டாகாது. நீர் எக்காரியத்தையும் எளிதில் செய்யவல்ல அதி பாலிய வயதுடையவராயிருக்கிறீர். இந்தச் சமயத்தில் பதினாயிரம் ரூபாய் உமக்குக் கிடைப்பது மிக்க சந்தோஷமான விஷயமல்லவா?'' என்றார்.

ஆகா ! பதினாயிரம் ரூபாய் ஒரே சமயத்தில் எனக்குக் கிடைக்கும் பட்சத்தில் என்னுடைய பாக்கியந்தான் என்னே ! ஒரு காசுகூட இல்லாத எனக்குப் பதினாயிரம் ரூபாய் வரும்பட்சத்தில் நான் இப்பணக் குவியலை வைத்துக்கொண்டு என்னதான் செய்யமாட்டேன் ! எப்படித்தான் இருக்கமாட்டேன் ! "ஆம் ! பதினாயிரம் ரூபாய் எனக்குக் கிடைக்கும்பட்சத்தில் சந்தோஷமாகத்தா னிருப்பேன்'' என்று மெதுவான குரலில் சொல்லிவிட்டு அம்மனிதரைப் பார்த்து "என்னிடமிருந்து எம்மாதிரியான உபகாரம் தங்களுக்கு வேண்டும்?'' என்று கேட்டேன். ஆனால் இந்தக் கேள்விக்கு அவர் உடனே சரியான விடை யளிக்காமல் என்னை நோக்கி "நான் சொல்லுவதெல்லாம், டாக்டரவர்களே ! உங்களுக்கு ஆச்சரியமாகவேயிருக்கும். ஆனால் நான் சொல்லும் ஒவ்வொரு விஷயத்தையும் நீங்கள் நன்றாக கிரஹித்துக் கொள்ளவேண்டும் தெரிகிறதா? நல்லது, முதலில் நான் கேட்பதை நீங்கள் தயங்காமல் செய்ய உடன்படவேண்டும். மேலும் அக்காரியம் இன்றைக்குள் முடிந்து போகவேண்டும்'' என்றார்.

உடனே நான் அவரைப் பார்த்து "அப்படியானால் நீங்கள் எண்ணியிருக்குங் காரியம் ஏதோ ஒரு உயிரைப்பற்றி (ஜீவனைப்பற்றி) யிருக்கவேண்டும். அப்படித்தானே?'' என்று கேட்க, அவர் "ஆம் ஒரு உயிரைப்பற்றிதான் !'' என்று விடை பகர்ந்தார்.

(தொடரும்.)

---

சர்ப்பனை செய்குவ தெப்பொழுதும் மற.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

பிரஜோற்பத்தி௵ மார்கழி௴—கலியுகாதி 5033, சாலிவாகனம் 1854,
பசலி 1341, கோல்லமாண்டு 1107, ஹிஜிரி 1350,
இங்கிலீஷ் 1931௵ டிசம்பர்௴—1932௵ ஜனவரி௴

| மார்கழி௴ | டிசம்பர்௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | புதன் | சப்21-18 | பூர60 | அமி60 | எற்றம், கபிலை ஸ்தாபிக்க |
| 2 | 17 | வியா | அஷ்27-40 | பூர4-48 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 3 | 18 | வெ | நவ34-25 | உத்12-35 | சி12-35அ | கிருஷியாரம்பம் |
| 4 | 19 | சனி | தச41-0 | ரே20-20 | மர20-20சி | |
| 5 | 20 | ஞா | ஏகா46-43 | அஸ்27-23 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி, வைகுண்ட ஏகாதசி |
| 6 | 21 | திங் | து51-20 | பா33-23 | சி33-23மர | கரிநாள், மச்ச துவாதசி |
| 7 | 22 | செவ் | திர54-18 | ❋கி38-5 | சி38-5அ | கிருத்திகை, பிரதோஷம் |
| 8 | 23 | புத | சது55-50 | ரோ41-18 | சித்60 | பாஷாண சதுர்த்தசி |
| 9 | 24 | வியா | ○55-55 | மிரு43-3 | மர60 | பௌர்ணமி, கரிநாள், ஸ்ரீ நடராஜர் அபிஷேகம் |
| 10 | 25 | வெ | பிர54-38 | திரு43-43 | சித்60 | ஆருத்திரா தரிசனம் |
| 11 | 26 | சனி | துதி52-25 | புன43-13 | சித்60 | |
| 12 | 27 | ஞா | திரி49-28 | பூச42-3 | சித்60 | |
| 13 | 28 | திங் | சது45-55 | ஆயி40-10 | சி40-10மர | |
| 14 | 29 | செவ் | பஞ்41-55 | மக37-50 | சித்60 | |
| 15 | 30 | புத | சஷ்37-38 | பூர35-13 | அமி60 | |
| 16 | 31 | வியா | சப்33-0 | உத்32-15 | ம32-15சித் | |
| 17 | 1932௵ ஜனவரி௴ 1 | வெ | அஷ்28-20 | அஸ்29-8 | அ29-8சி | |
| 18 | 2 | சனி | நவ23-15 | சித்25-45 | ம25-45அ | |
| 19 | 3 | ஞா | தச15-38 | சுவா22-18 | சி22-18மர | |
| 20 | 4 | திங் | ஏகா13-15 | விசா18-48 | மர18-48சி | |
| 21 | 5 | செவ் | து7-48 | அனு15-20 | சி15-20மர | |
| 22 | 6 | புத | திர3-8 சது59-3 | கே12-25 | சி12-25மர | மாசசிவராத்திரி, அவமாகம், குளம், கிணறு வெட்ட |
| 23 | 7 | வியா | அ●55-55 | மூல10-23 | சித்60 | சர்வத்திர அமாவாசை |
| 24 | 8 | வெ | பிர54-5 | பூரா9-3 | பிர9-3சித் | கணிதாரம்பம், கடன் தீர்க்க |
| 25 | 9 | சனி | துதி53-50 | உத்9-13 | சித்60 | சந்திர தரிசனம் |
| 26 | 10 | ஞா | திரி55-18 | திரு10-45 | அ10-45மர | கெற்போட்டம் நிவர்த்தி நா-49-18-வி |
| 27 | 11 | திங் | சது58-33 | அவி14-5 | சித்60 | மாச சதுர்த்தி விரதம் |
| 28 | 12 | செ | பஞ்60 | சத19-3 | மர60 | திருதினஸ்பிருக் |
| 29 | 13 | புதன் | பஞ்3-23 | பூர25-23 | அ25-23சி | சஷ்டி, 10-க்குள் மழை போகி பண்டிகை |

| | | | |
|---|---|---|---|
| ராகு | | | |
| | 4-மகா-சுக் 8-மகா-சனி 11-விரு-வ-பு 23-தனு-புத 24-மக-செவ் 29-கும்-சுக் | | குரு |
| | | | |
| ஆ-ச-பு செ-சு | | | கே |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.